என்று வணங்கப்படுகிறது. அவருக்கு நிழல் அளித்த அரச மரம் பல நூறு ஆண்டுகளாக ஆயிரக் கணக்கான மக்களால் வழிபடப்படுகிறது. சரித்திரத்திலேயே இதைவிடப் பழைய மரம் கிடையாதாம்.

கயை ரயில் நிலையம் கல்கத்தா—டெல்லிப் பாதையில் உள்ளது. கல்கத்தாவிலிருந்து 285 மைல் தொலைவு. திருத்தி யமைக்கப்பட்ட ரயில் நிலையம் சுத்தமாக இருக்கிறது. யாத்திரிகர்களுக்கான வழி காட்டும் அலுவலகமும் தங்குமிடமும் பற்பல ஓவியங்களினால் அலங்கரிக்கப்பட்டுள்ளன. புத்தரின் வாழ்க்கை நிகழ்ச்சிகளை வர்ணிக்கும் வண்ணப் படங்கள் உள்ளங் கவரும் வகையில் அமைந்துள்ளன. கயை ரயில் நிலையத்திலிருந்தும் காந்தி மைதானத்திலிருந்தும் புத்த கயைக்குப் பேருந்துகள் செல்கின்றன. அகலமான நெடுஞ்சாலை.

புனித அரச மரத்தை அடுத்துச் சமுத்திர குப்தனால் எழுப்பப்பட்டுள்ள மகா போதி ஆலயம் 170 அடி உயரம். அதன் நாற்புறங்களிலும் கோபுரங்கள். நேபாளம், பர்மா ஆகிய நாடுகளில் உள்ள பல புத்தர் கோயில்கள் இதையே மாதிரியாகக் கொண்டு அமைக்கப்பட்டவை. அதன் உட்புறத்தில், பத்மாசனத்தில் அமர்ந்திருக்கும் புத்தரின் கற்சிலை உள்ளது. அவர் ஞானம் பெற்ற போது அவருடைய தோற்றம் எவ்வாறிருந்ததோ, அதே முறையில் அமைக்கப்பட்டிருக்கும் சிலை இது என்று கலை வல்லுனர்கள் கூறுகிறார்கள்.

கோயிலைச் சுற்றிப் பற்பல ஸ்தூபங்கள். பல்வேறு அளவுடையவை. ஒவ்வொன்றிலும் புத்தரின் அருட் புன்னகைத் தோற்றம். நுழை வாயில்களில் பற்பல கலைக் காட்சிகள். இதன் மேற்குப் பிராகாரத்தில்தான் புகழ் பெற்ற அரச மரம் — மகா போதி விருட்சம் நிலைபெற்றிருக்கிறது. மாமன்னன் அசோகனின் மகள் சங்கமித்திரை துறவு பூண்டு இதன் கிளையை ஏந்திச் சிங்களத்துக்குக் கப்பல் ஏறினாள். இன்று பௌத்தம் அங்கு தழைத்ததற்கே அந்த மங்கைதான் காரணம். மாமன்னனின் மனமாற்றத்துக்குக் காரணமாக இருந்தவளும் அவளேதான் என்பதை நாம் அறிவோம். கோயிலின் தென்புறம் படித்துறையுடன் கூடிய தாமரைக் குளம். அருணோதய வேளையில் ஆயிரம் தாமரைகள் மலர்ந்த முகத்துடன் ஆதவனை வரவேற்பது மறக்க முடியாத ஒரு காட்சி அனுபவம்.

புத்தரின் தத்துவம் ஒன்றுதான். அவரை வழிபடும் மக்கள் பல வகையினர். அவர்களது முறை பலதரத்தவை. உடல் தரையில் பட வணங்குவது புத்த சமய நியமங்களில் ஒன்று. சமய நூலின் ஒவ்வொரு சுலோகத்தைச் சொல்லிய பிறகும் புத்தர்கள் தரையில் உடல் பட வணங்குகிறார்கள். இதற்காகவே ஏற்ற பலகையில் அமர்ந்து தாழ்ந்து தரையைத் தழுவி வணக்கம் புரிகின்றனர். மனிதக் கரத் தேய்ப்பினால் பளபளப்பேறிய அந்தப் பலகைகள் நமக்கு விளங்க வைக்கும் தத்துவம் ஒன்று உண்டு. அதுதான் உடலை மாய்ப்பது. பிள்ளையாருக்கு முன்பு தோப்புக்கரணம் போடுபவர்களைக் கண்டு நகைப்பவர்கள் இங்கு அஷ்டாங்க நமஸ்காரம் புரியும் தொண்டுக் கிழவர்களைக் காண வேண்டும்.

மகா போதி ஆலயத்துக்கு மேற்கே திபேத்தியர்கள் தமது கோயிலை நிறுவியுள்ளார்கள். இவர்களது வழி தாந்திரீக முறை. சொல்லின் ஒலியில், அதன் விளைவில் நம்பிக்கை உடையவர்கள் திபேத்தியர்கள். மந்திரச் சொற்கள் செதுக்கிய தகடுகளைச் சக்கரமாகச் செய்து தொகுத்து அதைக் கையால் சுழற்றி மனத்தை ஒருமிக்கச் செய்யும் வலிமை உடையவர்கள் திபேத்தியர்கள். திபேத்தியர்கள் வீடுகளில் எல்

**தி.சா.ராஜூ**





☐ பிராகாரத்தில் உள்ள தூண்கள் (சிதைந்து போனவை.)

☐ மகா போதி ஆலயம்.

புகைப்படங்கள்: கட்டுரை ஆசிரியர்

லாம் ஒரு பிரார்த்தனைச் சக்கரம் நிச்சயமாக இருக்கும். இங்கேயுள்ள கோவிலின் கீழ்த் தளத்தில் அந்தச் சக்கரத்தின் பெரிய மாதிரி ஒன்றை அமைத்திருக்கிறார்கள். அற நூலின் புனித வாசகங்கள் பொறிக்கப்பெற்ற பேருருளை அறை நடுவே பால் பேரிங்குகளின் சார்பினால் நிற்கிறது. உடல் வலுவைப் பயன்படுத்தி அதை இரண்டு முறை சுழற்றினால் பாவங்கள் தீரும் என்பது இவர்கள் நம்பிக்கை. மாடியில் வண்ணக் கண்ணாடிச் சாளரங்கள் உள்ள விசாலமான கூடம். புத்தர் தமது முக்கிய சீடர்களான மகா மொகலன்ன, சாரிபுத்தர் ஆகியோரோடு அமர்ந்திருக்கிறார். ஆனால் நடு நாயகமாக விளங்குவது இன்னொரு சிலை. அந்தப் புத்தர் இனிமேல்தான் அவதரிக்கப் போவதாகத் திபெத்தியர்கள் நம்புகிறார்கள். அந்தச் சிலையின் தலையில் ரத்தினக் கற்கள் பதித்த பொன்முடி.

ஆலயத்துக்கு வடக்கே பர்மிய விஹாரம் ஒன்றுள்ளது. ஜப்பானியர்களும் இங்கு ஆலயமும் மடமும் நிறுவித் தங்கள் மரியாதையைத் தெரிவித்திருக்கிறார்கள்.

தனித் தன்மையுடன் விளங்குவது தாய்லாந்தின் புத்தராலயமான வாட்தாய் புத்த கயா. மூன்றிலும் தாய்லாந்து முறைக் கட்டட அமைப்பு. பின்னால் இரு உயரமான கோபுர வடிவத் தூண்கள். ஒன்றில் வெண்கல வார்ப்பு மணி, மற்றதில் பூசைமுரச-நகாரா. தூண் மண்டபத்தில் விளிம்புகளில் எல்லாம் சிறுசிறு வெண்கல மணிகள் தொங்குகின்றன. அவைகளின் நீண்ட நாக்குகளில் பிளாட் சரங்கள். காற்று வீசும்போதெல்லாம் ஜலதரங்கத்தைப் போன்ற மணி ஓசை அங்கு பரவசமிக்க சூழ்நிலையை உண்டாக்குகிறது. சற்று உள்ளத்தை ஒடுக்கிக் கொண்டு நின்றோமானால், நமது இதயத்தின் துடிப்பும் மணியோசையும் ஒரே தாள கதியில் இயங்குவது புலனாகும். மனம் குவிய வகை செய்யும் தந்திரம் இது.

அறச்சாலைகள் நிறுவுவதை ஒரு முக்கிய குறிக்கோளாக மேற்கொண்டுள்ள பிர்லா குடும்பத்தினர் இங்கும் ஒரு விடுதியைக் கட்டியிருக்கின்றனர். மற்ற மடங்களும் தங்குமிடங்களும் கூடத் தூய்மையுள்ளவையே.

அமைதியை நாடி, தெய்விகச் சூழலை விரும்பும் யாத்திரிகர்களுக்கு புத்த கயை ஒரு வரப் பிரசாதம்.

---

# பறவை உண்ணும் சிலந்தி

இது ராட்சஸ சிலந்தி வகுப்பைச் சேர்ந்தது (Trantula). பார்த்தவுடனேயே நம்மைத் திடுக்கிட வைக்கும் இச்சிலந்தியின் உடல் பகுதி மாத்திரம் ஒன்றரை அங்குலம் நீளமும் அரை அங்குல அகலமும் கொண்டது. இதன் கால்கள் சுமார் இரண்டு அங்குலம் முதல் நான்கு அங்குலம் நீளம் கொண்டதாயும் சுண்டு விரல் அளவு பருமன் கொண்டதாயும் காட்சியளிக்கிறது. உடலெங்கிலும் அடர்த்தியாக ரோமங்கள். கறுப்பு கலந்த சாம்பல் நிறம். கால்களில் மஞ்சள் நிறப் பட்டைகள். மிக விரைவாக ஓடக்கூடிய திறன் பெற்றது.

மதுரைக்குப் பதின்மூன்று மைல்களுக்கப்பாலுள்ள அழகர் மலைக் காட்டில் இப் பறவை உண்ணும் சிலந்திகள் ஏராளமாக வசிக்கின்றன. மரப் பொந்துகளில் தங்கள் வாழ்க்கையை நடத்துகின்றன. தாம் வசிக்கும் மரப் பொந்துகளின் வாயில்களை, மற்றப் பிராணிகள் அப் பொந்துகளை வாழ்விடமாகத் தேர்ந்தெடுத்து விடாமல் தடுக்கத் தாம் சுரக்கும் பட்டு நூலால் மெல்லிய துணி போன்று நெய்து மறைத்து விடுகின்றன.

பகலில் இச்சிலந்தி இரை தேட வெளிக் கிளம்புவதில்லை. காரணம் இது உருவத்தில் ராட்சஸ சிலந்தியாயிருப்பினும் தன் இருப்பிடத்தைவிட்டு வெளிவந்த மாத்திரத்திலேயே காட்டில் வசிக்கும் ஒருவகை பெரிய குளவி தன் விஷக் கொடுக்கால் இதனைத் தாக்கி உணர்விழக்கச் செய்து தன் கூட்டிற்கு இரையாகத் தூக்கிச் சென்றுவிடும். ஆகவே, தன் விரோதிகளுக்குப் பயந்து இச்சிலந்தி பெரும்பாலும் இரவில் தான் இரை தேடப் புறப்படும். இரவில் தன் கூட்டை விட்டு வெளியேற வாயிலை அடைத்திருக்கும் பட்டுத் துணியின் ஒரு பகுதியைக் கத்தரித்துவிடும். இரை தேடிவிட்டுத் திரும்பவும் தன் கூட்டினுள் நுழைந்து கத்தரிக்கப்பட்ட பாகத்தைத் தான் சுரக்கும் பட்டு நூலால் வேய்ந்து முன்போல் வாயிலை மறைத்துவிடும். சிறு புழு, பூச்சிகளை உணவாகக் கொள்ளும் இச்சிலந்தி, உட்கார்ந்திருக்கும் சிறு பறவைகளைக்கூடக் கொன்று தின்றுவிடும். சப்தமின்றி மெதுவாகப் பறவையருகே சென்று சமயம் பார்த்துப் பாய்ந்து தனது வலுவான கால்களால் நன்கு பற்றிப் பிடித்து நெரிக்கும். அதே சமயம் தன் வாயின் முன்னே உள்ள கொம்பு போன்ற வளைந்த உறுப்பால் விஷத்தை அப்பறவையின் உடலினுள் செலுத்திவிடும். ஆகவே தான் இச்சிலந்திக்குப் பறவை உண்ணும் சிலந்தி என்ற பெயர் வந்தது. கொடூர விஷத்தைக் கொண்டுள்ள இந்த ராட்சஸச் சிலந்தி மனிதனைக் கடித்தால் அவன் பெருந் துன்பத்துக்குள்ளாக நேரிடும். ஒரு வேளை அவன் இறந்து போகவேகூட நேரிடலாம்.

1963ம் வருடம் மதுரைக்குப் பதின்மூன்று ரஷ்ய விஞ்ஞானிகள் வருகை புரிந்தனர். அப்போது அங்கு சென்னை பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த ஆய்வுக் கூடத்தில் வைக்கப்பட்டிருந்த இச்சிலந்தியைக் கண்ட ரஷ்ய விஞ்ஞானிகள் தங்களது நாட்டுக் காட்சிக் கூடத்துக்குத் தேவை என்று இதனை எடுத்துச் சென்றனர். லெனின்கிராடு கண்காட்சியில் இடம் பெற்றுள்ளது.

-அந்தோணி பேபி



மதுரை மீனாக்ஷி கோயில்
தென்னிந்திய கட்டிடக்
கலையின் உன்னதமான
எடுத்துக்காட்டு.





22 காரட் தங்கம் மற்றும்
வெள்ளியிலிருந்து
பிரமாதமான திறமையுடன்
உருவாக்கப்படும்
தென்னிந்திய நகைகளின்
தரத்திற்குச் சின்னம்

# நட்வர்லால் கோவிந்த்ஜீ ஜவேரி

ஜுவெல்லர்கள்,
ஏற்றுமதியாளர்கள் மற்றும்
இறக்குமதியாளர்கள்
நாணயம் மாற்றுவோர்
லைசென்ஸ் ந. 36/69

ஏர்-கண்டிஷன் செய்யப்பட்ட
எமது, பின்வரும் காட்சிக்
கூடத்திற்கு விஜயம்
செய்யுங்கள் :

அம்ருத்லால் மேன்ஷன்,
264-சி, எல். நப்பூ ரோடு,
மாதுங்கா (மத்திய ரெயில்வே)
பம்பாய்-19 DD, இந்தியா
போன் : 473526
கிராம்ஸ் : JAMNADIL

வியாபார நேரம்:
காலை 11 மணி முதல்
இரவு 8 மணி வரை.
திங்கட்கிழமை விடுமுறை.



cam/ngz/11 Tam

# ராமாயணம்

## ராஜாஜி

இந்தச் சோதனையுடன் ஹனுமானுடைய கஷ்டம் தீரவில்லை. ஆகாய மார்க்கமாக மிக வேகமாகச் சென்று கொண்டிருந்த போது காரணம் ஏதும் தெரியாமல் தன் வேகம் தடைப்பட்டு எதிர்க்காற்றில் சிக்கிய கப்பல்போல் செல்ல முடியாமல் கஷ்டப்பட்டான். ஏதோ பெரும் சக்தி தன்னைப் பிடித்துக் கொண்டு இழுப்பதாக உணர்ந்தான்.

நான்கு பக்கமும் மேலும் கீழும் பார்த்தான். அப்போது காரணத்தைக் கண்டான். கடலில் ஒரு பெரும் பூதத்தைக் கண்டான். அது வானர வீரனுடைய நிழலைப் பிடித்து அதன் மூலம் அவனுடைய வேகத்தைத் தடுத்து அவனை இழுத்துக் கொண்டிருந்ததைக் கண்டான்.

''உனக்காகவே காத்திருக்கிறேன். வா! எனக்குப் பொறுக்க முடியாத பசி'' என்று சொல்லி அந்த நிழல் பிடி பூதம் தன் வாயைப் பெரும் குகை போல் திறந்தது.

உடனே ஹனுமான் அந்த அரக்கியின் வாய்க்குள் புகுந்து உள்ளே தன் நகங்களால் அவளுடைய உயிர் நிலைகளைக் கிழித்துக் கொண்டு வெளி வந்துவிட்டான். பூதம் உயிரிழந்து கடலில் மூழ்கிற்று. கிரகணம் தீர்ந்த சந்திரன்போல் மறுபடியும் ஹனுமான் ஆகாயத்தில் கிளம்பிச் சென்றான்.

இப்படிப் பல சோதனைகளைத் தாண்டித் தன் நுட்பமான அறிவு, தைரியம், பலம், திறமை இவற்றைக் கொண்டு வெற்றியுடன் கடலைத் தாண்டிப் பறந்து வாழையும் தென்னையும் நிறைந்து விளங்கிய இலங்கைக் கரைக்கு அருகே வந்து விட்டான். இலங்கைத் தீவின் கடற்கரைச் சோலைகளையும் மலைகளையும் ஆறுகள் கடலில் சேரும் இடங்களையும் வனங்களையும் கண்டான்.

ராவணனுடைய தேசத்தின் வளத்தையும் அமராவதி நகரத்துக்குச் சமமான அழகையும் ஹனுமான் கண்டான்.

''போக வேண்டிய இடம் சேர்ந்து விட்டேன். இனி அரக்கர்களுக்கு நான் யார், எத்தகையவன் என்பது தெரியாதபடி சீதை இருக்குமிடத்தைத் தேட வேண்டும்'' என்று யோசித்துத் தன் விசுவரூபத்தைச் சுருக்கிக் கொண்டு சாதாரண வடிவத்தோடு ஹனுமான் இலங்கையில் ஒரு மலை மேல் இறங்கினான்.



## 65. எங்கும் தேடினான்

இலங்கையில் ஹனுமான் இறங்கினான். மிக உற்சாகமாகவும் மகிழ்ச்சி கொண்டவனாகவும் இறங்கினான். பிறகு நிதானமாக யோசிக்கலானான்:

''கடலைத் தாண்டி விட்டேன். உண்மைதான். ஆயினும், அதனால் வேலை முடிந்து போகவில்லை. திரிகூட மலைமேல் ராவணனுடைய பெரிய நகரம் ஆகாயத்தில் தொங்குவது

போல் காணப்படுகிறது. ஆஹா! எவ்வளவு அழகு! எவ்வளவு செல்வம்! எவ்வளவு ஆயுதக் காப்பு! அமராவதி, போகவதி நகரங்களுக்குச் சமானமான நகரமும் கோட்டையுமாக இருக்கிறது. வனங்களின் வனப்பு, மாளிகைகளின் அழகு, மதிற்



சுவர்கள், காவல் யந்திரங்கள், அகழிகள் இவற்றையெல்லாம் பார்க்கும்போது கவலையாக இருக்கிறது. இந்த ராவணனை எவ்வாறு எதிர்த்து ஜயிப்போம்? நான் தாண்டிய கடலை நம்முடைய சேனை எப்படித் தாண்டி வர முடியும்? தாண்டி வந்தாலும் இந்தக் கோட்டையை எப்படித் தாக்கி வெற்றியடைவோம்? ஆயுதபாணிகளாக நிற்கும் அரக்கர்களால் காக்கப்படும் இந்த நகரத்தை சாமம், பேதம், தானம், யுத்தம் எதனாலும் தகர்க்க முடியாது போலிருக்கிறது. ஆயினும் சீதை, உயிரோடிருக்கிறாளா இல்லையா என்பதை முதலில் காண வேண்டும். பிறகு மற்ற யோசனையெல்லாம்! ராவணனால் காக்கப்படும் இந்த நகரத்துக்குள் நான் எவ்வாறு எப்போது பிரவேசித்தல் நலம்? ஓரிடம் விடாமல் தேடினால் அல்லவோ சீதையை மறைத்து வைத்திருக்கும் இடத்தைக் காண முடியும்? யோசனை செய்யாமல் தவறான முறையில் நான் ஏதேனும் இப்போது செய்து விட்டேனானால் முதல் பிழை முற்றும் பிழையாகிப் போய், ராம காரியம் என்னால் கெட்டுப் போனதாகும்.

'பகலில் பிரவேசித்தால் இந்த அரக்கர்கள் எளிதில் என்னைக் கண்டு கொள்வார்கள். இரவிலேதான் நகரத்துக்குள் புக வேண்டும். எந்த உருவத்தை எடுத்து நான் பிரவேசிக்கலாம்? அரக்கர்கள் என்னைக் கண்டு சந்தேகப்படாத மிகச் சிறிய அற்ப உருவம் எடுத்துச் செல்ல வேண்டும்!'

இவ்வாறு யோசித்து ஒரு பூனையளவான சிறு குரங்கு உருவம் எடுத்துக் கொண்டான். நகரத்துக்குள்ளும் மாட மாளிகை உபவனம் முதலிய எல்லா இடங்களிலும் பிரவேசித்துத் தேடுவதற்கு அதுவே சௌகரியம் என்று தீர்மானித்தான். தீர்மானித்த உடனே வாயு புத்திரன் தன் இயற்கை உருவத்தைச் சுருக்கிக் கொண்டான். பிரம்மாண்ட பெரிய வடிவமாகிக் கடலைத் தாண்டிய ஹனுமான் ஒரு சிறு குரங்கானதை யாராவது கண்டிருந்தால் மிக வியந்திருப்பார்கள்.

இப்படி ஆஞ்சநேயன் சிறு குரங்கு வடிவம் எடுத்த சமயம் சூரியன் அஸ்தமித்துவிட்டான். ஹனுமான் கோட்டை வாயில் நோக்கிச் சென்றான். அச்சமயத்தில் சந்திரன் தோன்றி எங்கும் நிலா ஒளி நிறைந்திருந்தது. தேடும் வேலைக்குச் சகாயமாகவே சந்திரன் தோன்றியிருக்கிறான் என்று எண்ணி, ஹனுமான் உற்சாகத்தோடு சென்றான்.

மதிலால் காக்கப்பட்ட ராவணனுடைய நகரத்தின் அழகும் செல்வமும் போகமும் தூரத்திலிருந்து பார்க்கும் போதே ஹனுமான் மிகவும் வியந்தான். வீதிகள், மாளிகைகள், தோரணங்கள், அலங்காரங்கள், கொடிகள் எல்லாம் பொன், வெள்ளி, ரத்தின மயமாக ஜொலித்தன. சமுத்திரக் காற்று சுகமாக வீசிக் கொண்டிருந்தது. இந்திரனுடைய அமராவதியும் குபேரனுடைய அளகாபுரியும் போல் ராவணனுடைய நகரம் ஐசுவரியத்தின் உச்சியை அடைந்திருந்ததைக் கண்டான். வியப்பு ஒரு பக்கம். மற்றொரு பக்கம் இவ்வளவு பலமாகக் காக்கப்பட்டு ஐசுவரியம் நிறைந்த இந்தக் கோட்டையையும் நகரத்தையும் இதைப் பரிபாலித்து வரும் அரக்கனையும் எவ்வாறு வெல்வது என்கிற கவலை ராம தூதனுக்கு வளர்ந்தது.

இப்படி வியந்தும் கவலை கொண்டும் பார்த்துக் கொண்டே சென்றபோது அந்த நகரத்து அதிதேவதை பயங்கர வடிவத்துடன் ஹனுமானுக்கு எதிரில் நின்று, ''யார் நீ குரங்கு? இங்கே எவ்வாறு வந்தாய்? ஏன் வந்தாய்? உண்மையைச் சொல்'' என்று அதட்டிக் கேட்டாள்.

''நான் குரங்குதான். இந்த அழகிய நகரத்தைப் பார்த்துப் போக வந்திருக்கிறேன். எல்லாம் சுற்றிப் பார்த்து என் ஆசையைத் தீர்த்துக் கொண்டு திரும்பிப் போவேன்'' என்றான் ஹனுமான்.

லங்கா தேவதை கோபங் கொண்டு, ''குரங்கே!'' என்று ஹனுமானை ஓர் அறை அறைந்தாள்.

ஹனுமானும் தன் இடது கையால் லங்கா தேவியை ஒரு குத்துக் குத்தினான். கோர வடிவம்கொண்ட தேவதை அந்தக் குத்தைத் தாங்க முடியாமல் சுருண்டு விழுந்தாள்.

விழுந்த லங்கா தேவதை எழுந்து, ''ஒரு வானரத்தால் அடிபட்டு எந்த நாளில் நீ தோற்றுக் கீழே விழுவாயோ அன்று உன் நகரத்துக்கு முடிவு என்கிற வாக்கு உண்மையாகும் போலிருக்கிறது. ராவணனுடைய பிழைகள் முற்றிப் போயின. இனி இலங்கை அழிய வேண்டிய காலம் வந்து விட்டது. தேவர்கள் சொன்னது நிறைவேறப் போகிறது'' என்று சொல்லி விட்டு ஒதுங்கி நின்றாள்.

லங்கா தேவதை ராவணனுக்குக் கீழ்ப்படிந்த ஆள் அல்ல. அந்த நகரத்தின் விதியே அந்தச் சொரூபம்.

குரங்காகிய ஹனுமான் மதில் ஏறி உள்ளே குதித்துப் பிரவேசித்தான். விரோதிகளுடைய கோட்டைக்குள் சாதாரண வாயில் வழியாகச் செல்லல் ஆகாது. வழியில்லாத வழியில் செல்ல வேண்டும் என்பது பழைய யுத்த நீதி சாஸ்திரம். அரக்கர்கள் அழிய வேண்டும் என்று சங்கற்பம் செய்து கொண்டு ஹனுமான் லங்கா நகரத்துக்குள் இடது காலை முன் வைத்துப் பிரவேசித்தான்.

* * *

அழகிய புஷ்பங்கள் உதிர்ந்து மிகப் பொலிவடைந்திருந்த ராஜ வீதியில் சென்றான். மேகங்களுக்கு இடையில் மின்னல் வீசிப் பிரகாசிப்பது போல் பிரகாசித்துக் கொண்டிருந்தன, மாட மாளிகைகளெல்லாம். அவற்றின் மேல் ஏறிச் சென்றான். மாளிகைகளின் சௌந்தரியத்தை அனுபவித்துக் கொண்டே சென்றான்.

சொல்லுக்கு அடங்காத அழகுடன் அரக்கர்களின் மாளிகைகளும் அலங்காரங்களும் தெருக்களும் பிரகாசித்தன. சங்கீத சாஸ்திரோக்தமாகப் பாடிய பாட்டுக்கள் கேட்டன. அழகிய பெண்களும் அவர்கள் கால்களின் ஆபரணங்களுடைய சப்தமும் நிறைந்த மாளிகைகளைக் கண்டான். எங்கும் குதூகல ஆரவாரங்கள். சில வீடுகளில் மந்திரங்கள் ஜபித்துக் கொண்டிருப்பதைக் கேட்டான். சில வீடுகளில் அரக்கர்கள் வேதம் ஓதிக் கொண்டிருப்பதைக் கேட்டான். சில வீடுகளில் ராவணனை ஸ்துதி செய்து கொண்டிருக்கும் சப்தத்தைக் கேட்டான். யுத்த வீரர்களும் சாரர்களும் நிறைந்திருந்த வீதிகளைப் பார்த்தான். வைதிக முறையில் விரதம் பூண்டிருந்த பலரையும் இன்னும் அநேக காட்சிகளையும் கண்டான். கோரமான வடிவங்களையும் குரூர வடிவங்களையும் கண்டான். வில்லும், கத்தியும், பெருந்தடிகளும், கல் வீசும் கவண்டையுறிகளும், சூலாயுதங்களும், எறியும் வேல்களும் இன்னும் பல யுத்தப் படைகளும் வைத்துக் கொண்டு நிற்பவர்களைக் கண்டான். வீரர்கள் எல்லாரும் கவசங்கள் பூண்டிருந்தார்கள். (தொடரும்)

# இவருக்கு இதுவும் தெரியும்



திங்களூர் ஜகத்ரக்ஷக ரங்கநாதன். ஆமாம், தி. ஜ. ர. வைத்தான் குறிப்பிடுவது!

''உன் கடிதத்தில் 'க்', 'த்' பிழைகள் இருக்கவில்லை என்பதால்தான் உன்னை வேலைக்கு அழைத்தேன்'' என்றாராம், திரு. வி. க. அவரிடம்.

திண்ணைப் பள்ளிக்கூட வாத்தியார் வேலை; கர்ணம் வேலைக்கும், சர்வே வேலைக்கும் பயின்றது, மளிகைக் கடையில் சிற்றாள், தந்தையாருடன் அச்சுக்கூடத் தொடர்பு—இப்படி எத்தனை அநுபவங்கள் அவர் வாழ்வில் !

பள்ளியில் நான்காம் வகுப்புக்கு மேல் படிக்காவிடினும், அறிவியல் நூல்களைப் படிப்பதை நிறுத்தவில்லை. ஆங்கில நூல்களையும் அகராதி துணையுடன் படித்துப் புரிந்து கொண்டு இலக்கண அறிவையும் பெருக்கிக் கொண்டார். கூடவே இலக்கியங்களையும் அருவினார்.

ஆனந்த போதினி, நவசக்தி, ஊழியன், சுதந்திரச் சங்கு, ஜயபாரதி, தமிழ் நாடு, ஹநுமான், சக்தி, பாப்பா, ஹிந்துஸ்தான் முதலிய பத்திரிகைகளின் மூலம் அழகிய, எளிய இனிய தமிழ் நடையில் சிறுகதைகள், கட்டுரைகள், மொழிபெயர்ப்புகள் குழந்தைகளுக்குச் சுவையான கதைகள் முதலியவற்றை எழுதிக் குவித்திருக்கிறார். பலவற்றுக்கு இந்திய அரசாங்கமும், தமிழக அரசாங்கமும் பரிசளித்திருக்கின்றன.

## ஒளியூட்டுபவர் ஒலி எழுப்புகிறார்

அற்புதமான மொழிபெயர்ப்புக்கு முன் மாதிரி வேண்டுமா ? 'தி. ஜ. ர.வின் மொழி பெயர்ப்பைப் பாருங்கள்' என எந்தப் புது எழுத்தாளருக்கும் சொல்லலாம்.

வெண்டல் வில்கியின் 'ஒரே உலகம்' கால் நூற்றாண்டுக்கு முன் இவரால் மொழி பெயர்க்கப்பட்டு வெளிவந்த பரபரப்பூட்டிய புத்தகம்.

தமிழில் 'ரீடர்ஸ் டைஜஸ்ட்'டைப் போல் வெளியாகும் 'மஞ்சரி'யின் ஆசிரியரும் இவரே.

தி. ஜ. ர.வுக்கு ரேடியோ மெகானிசம் மிக மிக நன்றாகத் தெரியும் ! ரேடியோப் பெட்டியை அக்கு வேறு, ஆணி வேறாகப் பிரித்து, இணைத்துப் பாட வைத்துக் கேட்பதில், அவருக்குத்தான் எத்தனை ஆனந்தம் !

பண்பட்ட எழுத்தாற்றலைக் கொண்டு வாசகரின் உள்ளத்தில் ஒளியூட்டும் இவர் ''ஒலியெழுப்பும் பெட்டியை ஆராய முற்படக் காரணம் என்ன?'' என்று கேட்டேன்.

தி. ஜ. ர. பதில் அளித்தார்:

'' இரண்டாம் உலக யுத்தம் நடந்து கொண்டிருந்தது. ரேடியோ கிடைக்காத காலம். கட்டுப்பாடு செய்யப்பட்டு வெளி நாட்டிலிருந்து இறக்குமதியே இல்லை. யுத்தச் செய்திகளைக் கேட்கச் சங்கு சுப்பிரமணியம் ரேடியோ வைத்திருந்தார். அதில்தான் நானும் கேட்டு வருவேன். எப்படியாவது ஒரு ரேடியோ சொந்தமாக வாங்கி விடுவது என ஆசைப்பட்டேன். யுத்தம் முடிந்து, ரேடியோக்கள் வந்தன. மூந்நூறு ரூபாய் கொடுத்து வாங்கினேன். வருடம் 1946 என்று ஞாபகம். அதை விற்று விட்டு பிலிப்ஸ் வாங்கினேன். ரேடியோ ரிப்பேராகி விட்டது. 'ரேடியோ ஏன் பாடவில்லை?' எனக் கண்டு பிடிக்க ரேடியோவைப் பிரித்து விட்டேன்.''

''எப்படித் தைரியமாக ரேடியோவைப் பிரித்தீர்கள்?''— அவரிடம் கேள்வி.

''என் மகனிடம் ரேடியோ என்ஜினீயரிங் கற்றுக் கொள்ளச் சொன்னேன். அவனும் ஒப்புக் கொண்டான். உடனே அமெரிக்காவிலிருந்து தபால் மூலம் கற்றுத் தரும் பாடங்களை வரவழைக்கச் சொன்னேன். 'ஹாலிவுட் ரேடியோ அண்ட் டெலிவிஷன் இன்ஸ்டிடியூட்'டிலேயிருந்து பாடங்கள் வந்து கொண்டிருந்தன. மகனுடன் நானும் சேர்ந்து ரேடியோப் பாடங்களைக் கவனமாகப் படித்தேன். பையன் பாதியில் விட்டு விட்டான். நான் அதைத் தொடர்ந்தேன் !'' என்றார் புன்னகையுடன்.

பழுதாகியதால் ஆராய்ச்சிக்குட்பட்ட ரேடியோப் பெட்டி, தானே உருவாக்கிய டிரான்ஸிஸ்டர், ஆங்கில நூல்கள் இவற்றுக்கு மத்தியில் ஒரு விஞ்ஞானி மாதிரி தென்பட்டார் அவர் !

ஒலி அலை இயக்கத்தையும், மின் அலை இயக்கத்தையும், ஆகாயத்திலிருந்து மின் காந்த அலைகள் எப்படி ரேடியோப் பெட்டிக்குள் வந்து ஒலிபெருக்கியின் மூலம் காதுக்குக் கேட்கிறது என்பதையும் துல்லியமாக அறிந்து, சிறு பிள்ளைகளுக்குக்கூடப் புரியும்படி பேசுகிறார் !

''ரேடியோ மெகானிஸத்தைக் கற்க எவ்வளவு செலவு செய்தீர்கள்?''

''சிறுகச் சிறுக உபகரணங்கள், வேறு பொருள்கள் வாங்க மொத்தம் ஆயிரம் ரூபாயாவது செலவு செய்திருப்பேன் !.... பணச்செலவு மிகுந்த பொழுது போக்காக எனக்கு அமைந்து விட்டது'' என்றார் தி.ஜ.ர.

பேட்டி: ஏ. சுவாமிநாதன்



# சிதம்பர ரகசியம்

கதை: கோமதிசுவாமிநாதன்

சித்திரம்: ராஜு

10

இரவு சைக்கிளில்
சினிமாவுக்குப்
போவதாய்ப்போக்குக்
காட்டி விட்டு ரங்கதுரை,
தோட்டத்து இருளில்
யாருமறியாமல் பெண்
வேடம் போட்டுக்
கொள்கிறான்.
சைக்கிளை மரத்தின்
மேல் சாத்திவிட்டு
மாடி ஏறுகிறான்
அந்தப் 'பெண்',
மழைத் தண்ணீர்
வழியும் குழாய்
வழியாக!















# வனப்பும், புத்துணர்ச்சியும் பெற உபயோகியுங்கள்-சிந்தால்

நீங்கள் மாசுமறுவற்ற எழிலைப் பெற, நாள் முழுவதும்
புத்துணர்ச்சியுடன் திகழ, உபயோகியுங்கள்-
இருவகையில் நன்மை புரியும் சிந்தால் சோப்.
உலகிலேயே மிகச்சக்தி வாய்ந்த கிருமி
நாசினியாகிய ஜி-11 (ஹெக்ஸாக்ளோரோஃபீன்)
அடங்கியது சிந்தால்.

ஜி-11 அடங்கிய சிந்தால் மட்டுமே உங்களுக்கு
வனப்பையும், புத்துணர்ச்சியையும் அளிக்கிறது.

**சிந்தால் உண்மையிலேயே ஒரு துர் நாற்ற மகற்றும் சோப்**




Interpub/GS/20A Tam

# போராட்டங்கள்

ர.சு.நல்லபெருமாள்

## 10. ஆடுகள் இடையனை மேய்த்தால்...!

பழைய சம்பவங்களைப் பற்றிய நினைவை அசை போட்டுக் கொண்டே நிலவில் குளித்தபடி சைக்கிளில் சென்று கொண்டிருந்த சிவராமனின் பார்வை அவனுக்கு இடது பக்கத்திலிருந்த கமலசாமியின் வீட்டை நோக்கிப் பாய்ந்தது. அந்த வீட்டின் மாடி அறையில் இன்னும் விளக்கு எரிந்து கொண்டிருந்தது. ஏற்கனவே மெதுவாகப் போய்க் கொண்டிருந்த அவனுடைய சைக்கிள் அந்த இடத்தில் நத்தை வேகத்துக்குக் குறைய ஆரம்பித்தது. வேகம் குறையவே, சைக்கிள் தள்ளாடியது. கீழே விழாமல் இருக்க இடது காலைத் தரையில் ஊன்றி, சாய்ந்தவாறு நின்றான். பிறகு ஒரு துள்ளுத் துள்ளிச் சைக்கிளில் மீண்டும் நேராக அமர்ந்தவாறு செலுத்தினான். அவனுடைய பார்வை, அவனையும் மீறித் திரும்பி அந்த மாடி ஜன்னலை நோக்கியது.

'என்ன செய்து கொண்டிருக்கிறாளோ புத்தகக் கிறுக்கு... எதையாவது படித்துக் கொண்டிருப்பாள். பாவம், அவளை எவ்வளவு தூரம் வருத்தி வைத்துவிட்டேன்! இன்னும் எவ்வளவு நம்பிக்கை வைத்திருக்கிறாள்....! ஆனால் எனக்கும் உனக்கும் வாழ்க்கையில் உறவு ஒட்டுமா சாரதா....? கட்சிக் கூட்டம், தேர்தல் என்று காட்டுக்கும் மேட்டுக்கும் திரிகிறேன். நீயோ, பங்களா, புத்தகம், கற்பனை என்றிருக்கிறாய். எனக்கும் கம்யூனிஸ்ட் கட்சிக்கும் திருமணம் நடந்துவிட்ட பிறகு, உன்னை எப்படி...? இதை நீ புரிந்து கொள்ளவில்லையே, சாரதா...'

சிவராமனிடமிருந்து ஒரு நீண்ட பெருமூச்சுக் கிளம்பியது. அவனையறியாமலேயே சிரிப்பும் வந்தது. காதலைப் பற்றிய நினைவுதான் சிரிக்க வைத்தது. பொதுவுடைமைக் கட்சியின் புரட்சித் தத்துவங்கள் அவன் நினைவில் வட்டமிட்டன.

காதல் பூர்ஷ்வா வர்க்கத்தினரின் கற்பனை என்பது கட்சியின் தத்துவம். காதல் மட்டுமா? மனத்தை மயக்கும் எந்த விஷயமும் பூர்ஷ்வா வர்க்கத்தினரின் படைப்பு என்பது சித்தாந்தம். திடீரென்று சிவராமனின் அறிவில் ஒரு மின்வெட்டு வெட்டியது.

'மனத்தை மயக்குவதெல்லாம் பூர்ஷ்வா தத்துவமென்றால், கட்சியும் மனத்தை மயக்குகிறதே? அப்படியானால்....?'

ஒரு கணம் சிவராமன் அதிர்ச்சியுற்றான். கட்சியின் சித்தாந்தங்களில் ஊறிப் போனவனுக்கு அந்தக் கேள்வி, சிந்தனையில் உருவானதும் பதில் காண முடியவில்லை. திகைத்தான். அஸ்திவாரத்தையே அசைப்பது போலிருந்தது. ஆனால் கட்சியின் மிக முக்கியமான தத்துவங்களில் ஒன்று, கட்சி சித்தாந்தங்களுக்கு எதிராகத் தோன்றும் சந்தேகங்கள் அனைத்தும் அறியாமையின் நிழல் என்பது.

சிவராமனுக்கு அதற்கு மேல் தொடர்ந்து சிந்திக்க வழி இல்லை. அதற்குள் கட்சியின் கட்டடத்தை நெருங்கிவிட்டான். ஆகவே, மற்றச் சிந்தனைகள் அனைத்தும் விலகி, தலைவரைச் சந்திக்கப் போவது பற்றிய நினைவே எஞ்சி நின்றது. கட்டடத்துக்குள் சென்று, வராந்தாவில் சைக்கிளை நிறுத்திவிட்டு வேகமாக மாடிக்குச் சென்றான்.

தமது கட்சிக் கட்டடத்தின் மாடி அறையில் சிவராமனுக்காகத் தலைவர் வேதமூர்த்தி காத்திருந்தார். அவருடைய பார்வை சுவரில் தொங்கவிடப்பட்டிருந்த மாசே துங்கின் உருவப்

படத்தின் மீதே பதிந்திருந்தது. அந்தப் படத்திலிருந்து தமக்கு வேண்டிய சக்தியை அவர் பெற்றுக் கொண்டிருந்தாரோ என்னவோ? வைத்த கண் வாங்காமல் படத்தையே பார்த்தபடி ஆடாமல் அசையாமல் சிலையாக அமர்ந்திருந்தார். உள்ளே வந்த சிவராமன் அவருக்குப் பக்கவாட்டில் போய் நின்றான். அவன் வந்ததைக்கூட வேதமூர்த்தி கவனிக்கவில்லை. சிவராமன் சிறிது நேரம் பொறுத்துப் பார்த்தான். பிறகு இலேசாக இருமினான். இருமல் ஒலி கேட்டுத் திரும்பினார் வேதமூர்த்தி.

வேதமூர்த்தியின் முகத்தில் வழக்கமாகத் தென்படும் புன்னகை அப்போது இல்லை. கடுகடுப்போடு இருந்தார். ஒன்றும் பேசாமல் மேஜையின் மறுபுறம் இருந்த நாற்காலியைச் சுட்டிக் காட்டினார். அதில் சிவராமன் அமர்ந்தான். சிறிது நேரம் இருவரும் ஒன்றும் பேசாமல் இருந்தார்கள். தாடியை மெதுவாக வருடிக் கொண்டிருந்தார் வேதமூர்த்தி. இருவருக்கும் இடையே பெரிய மேஜை கிடந்தது.

''உன்னை ஒரு முக்கியமான விஷயத்துக்காகத்தான் கூப்பிட்டுவிட்டேன்'' என்றார் வேதமூர்த்தி.

சிவராமன் பதில் ஒன்றும் கூறாமல் அவரையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான்.

''உனக்கு என்மீது நம்பிக்கை இருக்கிறதா ?''

இந்தக் கேள்வியைச் சிவராமன் எதிர்பார்க்கவில்லை. பதுங்கி இருந்து திடீரென்று தாக்குவது போல் இருந்தது கேள்வி. திடுக்கிட்டு விழித்தான் சிவராமன். குழப்பத்துடனே வேதமூர்த்தியை வெறிக்கப் பார்த்தான்.

''இதென்ன கேள்வி....? உங்கள் மீது நான் அவநம்பிக்கை கொள்வேன் என்று நீங்கள் நினைக்கிறீர்களா....?'' என்று எதிர்க் கேள்வியைப் போட்டான் சிவராமன்.

''உனக்குப் பூரண நம்பிக்கை தானே?''—மீண்டும் கேட்டார் தலைவர்.

சிவராமன் குழம்பினான்.

''காரியத்தோடுதான் கேட்கிறேன். உன்னுடைய பதில் ஒளிவுமறைவின்றி வர வேண்டும். இது கட்சியின் எதிர்காலத்தைப் பற்றிய விஷயம்'' என்றார் தலைவர். அவருடைய குரலிலிருந்து எந்தவிதமான மன நிலையில் அவர் இருக்கிறார் என்பதை அறிய முடியவில்லை. முகத்திலும் எவ்வித பாவமும் இல்லை. கண்களோ ஒரே நோக்காகச் சிவராமனின் விழிகளை ஊடுருவிக் கொண்டிருந்தன.

''பூரண நம்பிக்கை வைத்திருக்கிறேன்'' என்றான் சிவராமன்.

''அப்படியானால், இன்று காலையில் என்னுடைய அபிப்பிராயத்துக்கு எதிராக நீ ஏன் பேசினாய்?''

''அது மற்றவர்களுடைய கருத்து. அதைத்தான் நான் கூறினேன்.... ஆந்திரத் தலைவர்கூடத் தேர்தல் நடத்துவதைத்தான் ஆதரித்தார்.''

''அவனுக்கு இந்தக் கூட்டத்தில் அபிப்பிராயம் சொல்ல என்ன உரிமை இருக்கிறது....? ஆந்திராவில் அவனுடைய போக்கு சரியாக இல்லை. கட்சியில் பிளவு உண்டாக்கிவிடுவான் போல் இருக்கிறது. என்





னுடைய திட்டங்களில் அடிக்கடி குறுக்கிடுகிறான்... சரி, இருக்கட்டும்... சிவராமன்! மற்றவர்களுடைய கருத்தைப் பற்றி நீ அக்கறை கொள்ள வேண்டியதில்லை. உனக்குத் தலைவர்மீது பூரண நம்பிக்கை இருந்தால், மற்றவர்கள் கருத்துக்கு இசைய வேண்டிய அவசியமே இல்லை'' என்றார் வேதமூர்த்தி, கோபத்துடன்.

''தேர்தல் என்று வரும் போது....''

''சிவராமன்! கம்யூனிஸ்ட் கட்சியின் சித்தாந்தங்களையும், கட்சி செயலாற்ற வேண்டிய முறைகளையும், நீ நன்றாகத் தெரிந்து வைத்திருக்கிறாய். இருந்தும், உனக்குள் குழப்பம் இருக்கிறது. இன்னும் நீ தெளியவில்லை. இன்று நீ சாதாரணத் தொண்டன் இல்லை. மாநிலத் தலைவன். தலைவனுக்குள்ள இலக்கணம் அனைத்தும் உன்னிடம் அமைய வேண்டிய நிலையில் இன்றிருக்கிறாய்... புரிகிறதா, சிவராமன்?''

''தலைமைப் பதவிக்கு நான் தகுதியற்றவன் என்று நினைக்கிறீர்களா?'' என்று சந்தேகத்தோடு கேட்டான் சிவராமன்.

''இல்லை... நீ தகுதி உள்ளவன் என்பதை நான் உணர்ந்ததால்தான் உன்னைத் தேர்ந்தெடுத்தேன். ஆறு மாதங்களுக்கு முன், முதன் முதலில் பொதுக் கூட்டத்தில் நீ வெற்றிகரமாகப் பேசியதைக் கண்ட

உடனேயே தலைமைப் பதவிக்கு ஏற்ற வன் என்ற முடிவுக்கு வந்து விட் டேனே.''

'' இன்னும் சிலர் போட்டியிட விரும்பினார்கள்.''

''போட்டியிடவோ, தேர்தல் நடத் தவோ, பெரும்பான்மையினர் சொல் லைக் கேட்டு நடக்கவோ நான் இங் கில்லை. கட்சியை நடத்திச் செல்லத் தான் நான் இருக்கிறேன். சிவ ராமன்! இதோ இருக்கிறாரே தலைவர் மாவோ; இவர்தான் சீனக் கம்யூனிஸ்ட் கட்சியை நடத்துகிறாரே தவிர, கட்சி, இவரை நடத்துவதில்லை. இவர்தான் சீனாவை ஆள்கிறாரே தவிர, சீனா இவரை ஆள்வதில்லை. இதுதான் இந்தக் கட்சி யின் தலையாய சித்தாந்தம்'' என்று கூறிய தலைவர் வேதமூர்த்தி, மாசேதுங் கின் படத்தைச் சுட்டிக் காட்டியபடி சிறிது நேரம் மௌனமா யிருந்தார். பிறகு சொன்னார்:

''தேர்தல், போட்டி என்பதெல்லாம் கேட்கவும், படிக்கவும் ரசமாயிருக்கும். இந்த விதிமுறைகள் அனைத்தும், பூர்ஷ்வா வர்க்கத்தினரின் பிரமை. நம் முடைய முக்கிய லட்சியம், கட்சிதானே தவிர இந்தச் சில்லறை விஷயமல்ல.''

சிவராமன் தலைவர் கூறியதைக் கவன மாகக் கேட்டுக் கொண்டிருந்தான். வேதமூர்த்தி, நாற்காலியை விட்டு எழுந்து அந்த அறைக்குள் அங்கும் இங்கும் ஒரு முறை நடந்தார். பிறகு, சிவராமனுக்கு எதிரே வந்து நின்று மேஜையின்மீது ஒரு கையை ஊன்றிக் கொண்டு கேட்டார் —

'' மனித இனத்தின் ''விடுதலையைப் பெற்றுத் தரக்கூடிய கட்சி, இந்தக் கட்சிதான் என்பதில் உனக்குச் சந்தேக மில்லையே ?''

சிவராமன் தலையை அசைத்தான், இல்லை என்ற பாவனையில்.

''பாட்டாளி வர்க்கந்தான் இந்த உலகத்தின் ஆட்சி பீடத்திலிருக்க வேண் டும் என்னும் சித்தாந்தத்திலும் உனக் குச் சந்தேகம் இல்லையே ?''

இதற்கும் தலை அசைத்தான் சிவ ராமன்.

''உலகத்தில் இன்றிருக்கும் கேடுகள் அனைத்துக்கும் முதலாளி வர்க்கத்தின ரின் போக்குத்தான் காரணம் என்பதை நம்புகிறாயா?''

''நம்புகிறேன்.''

''இன்று, மனித இனத்தைப் பீடித் திருக்கும் கேடுகளைக் களைந்து, பாட் டாளிகளின் பலத்தைப் பெருக்கி உலகம் முழுவதையும் ஒரு லட்சியத்தின் கீழ் கொண்டு வர ஒரே ஒரு கட்சிதான் தேவை என்பதை நீ உணர்ந்து கொண்டாயா ?''

''ஓ.... அந்த ஒரே ஒரு கட்சி நம் முடைய கட்சிதான் என்பதையும் புரிந்து கொண்டிருக்கிறேன்'' என்றான் சிவராமன் உணர்ச்சிப் பெருக்குடன்.

''அந்த ஒரே கட்சி, சக்தி வாய்ந்த தாக இருக்க, எல்லா எதிர்ப்புக்களையும் சமாளித்து வளர ஒரு சக்தி மிக்கத் தலைவன் வேண்டும் என்பதையும் நீ ஒப்புக் கொள்வாய். சிவராமன், தலை வன்தான் கட்சியை நடத்திச் செல்ல வேண்டும். இடையன்தான் ஆடுகளை மேய்க்க வேண்டும். ஆனால் ஆடுகள் சேர்ந்து இடையனை மேய்க்க முயன் றால்...? இன்று நடந்த கூட்டத்தில் உன் னுடைய போக்கு அப்படித்தான் இருந் தது.....'' என்று கூறிவிட்டுச் சிவ ராமனை உற்றுப் பார்த்தார் தலைவர்.

'கட்சிக்காகத் தலைவரா, அல்லது தலைவருக்காக ஒரு கட்சியா?' என்று கேட்டுவிடத் துடித்தான். ஆனால் வாயில் வார்த்தைகள் வெளிவர வில்லை. சொல்ல நினைத்த சொற்கள் உள்ளேயே அடங்கி விட்டன.

''நான் உங்களை எதிர்க்க வேண்டும் என்று நினைக்கவில்லை......'' என்று அவன் தட்டுத் தடுமாறிக் கூறியபோது தலைவர் குறுக்கிட்டார்:

''நீ சொல்லப் போவது எனக்குத் தெரியும். என்ன காரணத்தைக் காட் டினாலும், கட்சியின் அடிப்படைத் தத்து வத்துக்கு ஏற்றதாயிராது. நம் கட்சி, ஒரு போர்ப் படையின் தன்மையில் செயல்படுகிறது. இதில் படைத் தளபதியின் சொல்தான் முடிவானது. இதை நீ பூரணமாக உணர்ந்து கொள்ள வேண்டும். அப்போதுதான் தலைமைப் பதவியைத் திறம்பட வகிக்க முடியும். இன்று இந்த மாநிலத்துக்கு நீதான் தளபதி. இந்தப் பகுதியிலுள்ள கட்சித் தோழர்களுக்கு உன்னுடைய சொல்தான் முடிவான சட்டம். இதை நீ மனத்தில் கொண்டுதான் செயலாற்ற வேண்டும். இதில் கொஞ்சமும் விட்டுக் கொடுக்கக் கூடாது. தலைவன் என்ற முறையில் உன்னால் செயல்பட முடியுமா ?''

''முடியும், ஐயா...! செயல்படுத்திக் காட்டுகிறேன்'' என்றான் சிவராமன் உற்சாகத்துடன். அவனுடைய தோளைத் தட்டினார் தலைவர். பிறகு சொன்னார்:

''சட்டம், விதிமுறைகள் எல்லாவற் றுக்கும் அப்பாற்பட்டவன் தலைவன். தலைவனுக்குத்தான் அவை அடிபணிய வேண்டுமே தவிர, தலைவன் சட்டத் துக்குப் பணிய வேண்டியதில்லை.'' இவ்வாறு கூறிவிட்டு ஒரு முறை அந்த

அறைக்குள் குறுக்கும் நெடுக்குமாக நடந்தார் வேதமூர்த்தி. பிறகு சிவராமனைத் திரும்பிப் பார்த்துச் சொன்னார்:

''நேற்று வரை நீ ஒரு சாதாரணத் தொண்டன். இன்று உன்னுடைய நிலைமை வேறு. தலைவனாகி விட்டாய். ஒரு தலைவனுக்குள்ள தன்மையைப் பூரணமாக நீ பெற்றே ஆக வேண்டும். இதுவரை நீ கற்ற பாடங்களும், பெற்ற உணர்வுகளும் கட்சியின் சாதாரணத் தொண்டன் என்ற முறையில்தான். இனி நீ தெரிந்து கொள்ள வேண்டியவை முற்றிலும் மாறானவை.''

மீண்டும் அந்த அறைக்குள் நடந்தார். பிறகு, மேஜையின் விளிம்பில் அமர்ந்தவாறு சொன்னார்:

''ஒரு மாபெரும் கட்சித் தலைவனுக்கும், இதர தொண்டர்களுக்கும் வித்தியாசம் உண்டு. இதை ஒவ்வொரு கட்டத்திலும் ஏற்கனவே நீ உணர்ந்திருப்பாய். சில வேளைகளில் உனக்குத் திகைப்பாகவும் இருந்திருக்கும்.''

சிவராமன் பயபக்தியுடன் கேட்டுக் கொண்டிருந்தான். வேதமூர்த்தி அவனை விட்டு விலகி, மாசேதுங்கின் படத்தின் முன்னால் போய் நின்று, அதைப் பார்த்தபடியே பேசினார்.

'' கொடுமையாகவோ, பொய்யாகவோ நடக்க வேண்டியிருந்தால் தலைவன் அவ்விதம் நடந்துதான் தீர வேண்டும். ஒரு செயலில் தீவிரமாக இறங்கிவிட்ட பிறகு, அங்கு தர்மத்தையோ, நியாயத்தையோ எண்ணிப் பார்த்துக் கொண்டிருக்கத் தேவை இல்லை. தனிப்பட்ட முறையில் ஒரு காரியம் அநீதியாகவோ, கொடூரமாகவோ இருக்கலாம். ஆனால், அது கட்சியைப் பொறுத்தவரையில் மிகவும் அவசியமான காரியமாயிருக்கும். கட்சிக்குள் வந்துவிட்ட பிறகு தனி மனிதனின் கொள்கைக்கோ, மனசாட்சிக்கோ இடமில்லை. கட்சியின் வளர்ச்சிதான் தலைவனின் லட்சியம். அந்த லட்சியப் பாதையில் சிலரைப் பலியிட்டு முன்னேற வேண்டிய சந்தர்ப்பம் வந்தால், அதற்கும் தயங்கக் கூடாது. தலைவனுக்கென்று சொந்த லட்சியங்களோ, மனசாட்சியோ கிடையாது. அவற்றைப் பற்றி அவன் அக்கறை கொள்ளத் தேவையில்லை. லட்சியத்தைப் பற்றிய முடிவு நல்லதாயிருக்குமானால், அதைப் பெறக் கையாளும் முறைகளைப் பற்றிக் கவலைப் பட வேண்டியதில்லை....''

வேதமூர்த்தி, பேசுவதை நிறுத்தி விட்டு, படத்தையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார். சிவராமன் மிகுந்த வியப்புடனும், ஒருவித அச்சத்துடனும் அவருடைய முகத்தையே வெறிக்கப் பார்த்துக் கொண்டிருந்தான். தன் முகத்தில் அரும்பியிருந்த வியர்வையைத் துடைக்கக்கூட உணர்வற்றுத் தலைவரின் பேச்சில் லயித்திருந்தான்.

'' லட்சியத்தின் படிகள் ஒவ்வொன்றிலும் தலைவன் ஏறும் போது, பலாத்காரத்தையோ, பயங்கரத்தையோ துணை கொள்ள வேண்டியிருந்தால், தயங்கவே கூடாது....'' என்று தலைவர் கூறியபோது சிவராமன் குறுக்கிட்டான்.

''ஐயா...!'' என்றான்.

வேதமூர்த்தி நின்ற இடத்திலிருந்தவாறே திரும்பி அவனைப் பார்த்தார். புருவங்கள் உயர்ந்து, கேள்விக்குறியைத் தாங்கின.

'' நெருங்கியவர்களை உதாசீனம் செய்து கொடுமையாக நடந்து கொள்வதால் ஒரு தலைவருக்கு வலிமை கிட்டலாம்; ஆனால் புகழடைய முடியாதே'' என்றான் சிவராமன்.

''தலைமைப் பதவி, புகழைப் பெறுவதற்காக அல்ல. சிவராமன், தனி மனிதனின் புகழும், போகமும் மக்கிப் போன பூர்ஷ்வா இனத்தின் கற்பனைகள். தலைவனுக்குப் புகழ் தேவை இல்லை. கட்டி ஆள வலிமைதான் வேண்டும். தன்னைப் பற்றி மற்றவர்கள் என்ன நினைப்பார்கள் என்ற தயக்கம், ஒரு தலைவனிடம் இருக்கவே கூடாது. பிறரிடம் தலைவன் அன்பு செலுத்த வேண்டியதில்லை சிவராமன், அச்சத்தை வளர்த்தால் போதும்'' என்று கூறிக்



## மலேசியப் பிரதமருக்குத் திருக்குறள்

சமீபத்தில் மலேசியப் பிரதமர் துங்கு அப்துல் ரஹ்மானுக்குத் திருவாசகமணி பாலசுப்பிரமணியம் தமது திருக்குறள் ஆங்கில மொழிபெயர்ப்பு நூல் பிரதியை வழங்கினார். படத்தில்: பம்பாய் நகர மேயர் டாக்டர் சாந்தி படேல், மலேசியத் தேசியத் தொழிற் சங்கப் பொதுச் செயலாளர் திரு பி. பி. நாராயணன் ஆகியோரையும் காணலாம்.

---

கொண்டு சிவராமனை நெருங்கி வந்தார், வேதமூர்த்தி. அவனுடைய தோள் மீது கையை வைத்து அழுத்தினார்.

''இப்போது என்னை நீ நன்ருகப் புரிந்து கொண்டிருப்பாய்...'' என்று கூறி, அவனை உற்றுப் பார்த்தார்.

சிவராமன் உட்கார்ந்தபடியே தலையை நிமிர்த்தி அவரைப் பார்த்தான். அவருடைய சிவந்த கண்களோடு அவனுடைய பார்வை கலந்தது. அந்தக் கண்களுக்குள் அவன் பார்த்த உணர்ச்சி அலைகள் தாம் எத்தனை!

கொடும் புலியின் சீற்றமும், பயங்கரக் காட்டினுள் பொதிந்திருக்கும் இருள் செறிந்த அமைதியும், சூருவளியின் வேகமும், கொடிய நாகத்தின் விஷமும், சூதும், வாதும் வஞ்சனையும்...

அப்பப்பா, எத்தனை கொடுமை! அத்தனையும் அந்தக் கண்களுக்குள் மின்னுகின்றனவே! அந்த மின்னல்களுக்கிடையில் திண்மையும், சுய உணர்வுகளை அடக்கி ஒடுக்கிவிட்ட வைராக்கியமும், லட்சியத்தின் மீதுள்ள மாளாத வெறியும், தலைவர் என்னும் நினைப்பில் உரமேறிவிட்ட செருக்கும் தலைதூக்கி நின்றன.

நேருக்கு நேர் அவருடைய பார்வையை எதிர்க்கத் திராணி அற்றுத் தன் பார்வையை வேறு திசையில் திருப்பினன், சிவராமன். அவருடைய அழகான சின்னத் தாடி கூட அப்போது அவனை அச்சுறுத்துவதாக இருந்தது. அவனுக்கு ஒவ்வொன்ருகப் புரியத் தொடங்கியது.

எத்தனையோ இரகசியங்கள், பயங்கரங்கள், பூசல்கள், துரோகங்கள், பலிகள்......

இவையெல்லாம் இந்தக் கட்சியின் சாதனைகளுக்கு அஸ்திவாரங்கள்.

தலைவரின் வாயாலேயே தலைமைப் பீடத்தின் தத்துவ விளக்கத்தைக் கேட்டபோது, சிவராமனின் மெய் சிலிர்த்தது. உள்ளம் நடுங்கியது. தலைவருக்குத் தேவையான அத்தனை திடமும், வைராக்கியமும் தன்னிடம் உண்டா என்ற சந்தேகம்கூட அவனை அப்போது பற்றிக் கொண்டது.

அவரை மீண்டும் ஒரு முறை தலை நிமிர்ந்து பார்த்தான். அவருடைய கம்பீரம், கவர்ச்சியான சின்னத் தாடி, துளைக்கும் பார்வை — அனைத்தும் அவனுக்குத் தெம்பை ஊட்டின.

''சிவராமன்! உனக்குச் சொல்ல வேண்டியதைச் சொல்லி விட்டேன். உன் மீது எனக்கு நம்பிக்கை இருக்கிறது'' என்று கூறிவிட்டு அவன் தோள் மீது வைத்திருந்த தம் கையை எடுத்தார். பிறகு, அந்த அறையை விட்டு வேகமாக வெளியேறினர்.

சற்று நேரம் திகைப்புடன் உட்கார்ந்த இடத்திலேயே கல்லாகச் சமைந்து விட்டான் சிவராமன். சற்று முன் தலைவர் கூறியவை அனைத்தும் நினைவில் வந்து மோதின. தலையை நிமிர்த்திச் சுவரில் தொங்கிக் கொண்டிருந்த ஸ்டாலின் படத்தையும், மாசே துங்கின் படத்தையும் பார்த்தான்...... அவனையும் அறியாமல் உடல் சிலிர்த்து நடுங்கியது. அவன் நாற்காலியைவிட்டு எழுந்து வராந்தாவுக்கு வந்தான். அங்கே நல்லதம்பி இவனுக்காகக் காத்திருந்தான். அவனிடம் விடை பெற்றுக் கொண்டு சைக்கிளில் வீட்டை நோக்கிப் புறப்பட்டான் சிவராமன்.

அவன் மனத்தில் அமைதி இல்லை. தலைவரின் கருத்துக்களை அவனுல் முழுவதும் ஜீரணிக்க முடியவில்லை.

(தொடரும்)



# ரகுபதி ராகவ



மகாத்மா காந்தி

தமிழாக்கம்: ராஜாஜி



## 47 – (I)

உள்ளத்திலுள்ள மலம் நீங்குவதற்காகவும் தனக்குள்ளிருக்கும் நற்குணத்தை யெல்லாம் திரட்டிக் கொள்வதற்காகவும் பக்தன் கோவிலுக்குச் செல்வது. உயிருடன் நடமாடும் பெரியார் ஒருவரைத் தரிசனம் செய்வதால் அந்தப் பெரியாரிடமிருந்து நன்மையை அடையலாம். அதற்கும் சுயநலமற்ற பக்தியோடு பூஜிக்க வேண்டும். நாம் பூஜிக்கத் தகும் பெரியார்களை விடத் தேவாலயத்தில் நாம் பூஜை செய்யும் கடவுள் பரிபூரண குணங் கொண்ட தெய்வமாகும். நம்முடைய கற்பனைக்கு அப்பால் நிற்கும் பூரணம். மக்களுக்கு நாம் எழுதும் கடிதங்கள் பயனற்றுப் போகின்றன. விண்ணப்பம் செய்வது ஏமாற்றத்தில் முடிகிறது. சில சமயம் பதிலே வராது. ஆண்டவனுக்கு நாம் செய்யும் விண்ணப்பத்துக்கும் பக்தன் கோவிலுக்குச் சென்று பிரார்த்தனை செய்து கொள்வதற்கும் காகிதம் வேண்டியதில்லை, பேனாவும் வேண்டியதில்லை, மசியும் வேண்டியதில்லை. பேச்சுமே வேண்டியதில்லை. வாய் திறவாமல் மௌனமாகச் செய்யும் பிரார்த்தனையே போதும். அந்தக் கடிதத்துக்குப் பதில் இல்லாமல் போகாது. பூஜை முழுவதும் ஒருவனுடைய பக்திக்குப் பயிற்சியும் அதன் மூலம் சக்தியும் தருவதாகும். அந்தப் பயிற்சியில் கஷ்டம் என்பது கிடையாது. பயனற்றுப் போவது என்பதும் கிடையாது. ஏமாற்றமும் கிடையாது. நாம் சொல்லுவதை அவன் தவறாகக் கொள்வான் என்கிற பயமும் கிடையாது. ஒரு மனிதப் பிறவிக்குச் செய்யும் விண்ணப்பத்துக்கும் ஆண்டவனுக்குச் செய்யும் விண்ணப்பத்துக்கும் இதுவே வித்தியாசம். கோவிலுக்கும் மசூதிக்கும் போய் பூஜை செய்வதன் நோக்கம் இதுவே. பகவானுடைய இருப்பிடம் என்று கருதி எந்த விதத் தேவாலயத்துக்குச் சென்று பூஜை செய்தாலும் இதுவே பொருளும் பயனும். நாம் செலுத்தும் பக்தியே அந்தக் கோவில்களின் சிறப்பு. கண்ணுக் கெட்டாத பொருளைத் தேடி அடைய ஆசைப்பட்டு மக்கள் கோவில்களைத் தோற்றுவித்தார்கள். (ஹரிஜன் 18-3-33)

தெய்வம் அல்லாத ஒரு பொருளைத் தெய்வமாகப் பாவித்து வழிபடுவதைக் கண்டனம்செய்யும் கூட்டத்தில் நானும் ஒருவன் என்று வைத்துக் கொள்ளலாம். ஏனெனில் நாம் வழிபடும் முறையைத் தவிர மற்ற முறைகள் எல்லாம் தவறு, பயனில்லை என்று கருதுகிறார்கள். அது மூர்க்கத்தனம். அத்தகைய மூர்த்தி பூஜையை நானும் கண்டிப்பேன். நமக்குப் பிடித்த முறையே சரியான முறை; நம்முடைய மதமே சரியான மதம் என்று மூர்க்கமாகப் பிடிவாதம் செய்வது ஒரு வகையான விக்கிரக பூஜையேயாகும். இந்த விக்கிரக பூஜையில் மோசமும் ஏமாற்றமும் அதிகம். கல்லும் செம்பும் மரமும் வைத்துப் பூஜை செய்வதைக் காட்டிலும் இந்த மூர்க்கத்தனம் அதிக மடமையாகும்; குற்றமுமாகும். ஒரு கல் விக்கிரகத்தைக் கடவுள் என்று வைத்துக் கொள்வதில் அவ்வளவு தவறில்லை. என்னுடைய மதமே சரியான மதம், மற்றவர்களுடைய சமயங்களெல்லாம் பாபமாகுமென்று தன்னுடைய பிடிவாதத்தையே கடவுளாகப் பாவிப்பது எல்லாவற்றையும்விடப் பெரிய அறியாமையாகும். (யங் இந்தியா 28-8-24)



# அன்னையும் பிதாவும்

அண்ணல் காந்தியடிகளின் நூற்றாண்டும் கஸ்தூரிபாவின் நூற்றாண்டும் ஒரே சமயத்தில் கொண்டாடப்பட்டதை யொட்டி வெளிவந்துள்ள காந்திய நூல்களில் திரு மீ. வி. சபரி ராஜன் எழுதிய "காந்தி" என்ற நூலும் திரு கே. எஸ். ஜம்புநாதன் எழுதிய "கஸ்தூரிபா கதைகள்" என்ற நூலும் நமது விசேஷ கவனத்துக்குரியவை யாகின்றன. இப்படி நாம் சொல்வதற்குப் பல காரணங்கள் உண்டு. இவ்விரு நூலாசிரியர்களுமே மகாத்மாவிடமும் பாவிடமும் அளப்பரிய பக்தி கொண்டவர்கள்; காந்திய இலக்கியத்தில் மூழ்கித் திளைத்தவர்கள்; அண்ணல் எழுதியவற்றை அநேகமாக வரி விடாமல் படித்தவர்கள்; தங்கள் சக்திக்கு ஏற்ப பாபுஜி வகுத்த பாதையில் வாழ்ந்து காட்டியும் வருகிறவர்கள். ஆனால் நூல் எழுத இவையெல்லாம் போதாதே! இவ்வளவுடன் இவ்விருவருமே சிறந்த தமிழ் எழுத்தாளர்களாகவும் இருப்பது நமது அதிர்ஷ்டம்!

எளிமை மிக்க இவர்கள், எளிய நடையில் தத்தமது நூல்களை எழுதி, எளிய முறையில் அச்சிட்டு எளியோரும் வாங்கும் விலையில் வழங்க முற்பட்டிருப்பது பாராட்டுக்குரியது.

'காந்தி' என்ற தலைப்பில் திரு மீ.வி. சபரி ராஜன் எழுதியுள்ள நூலில் ஒரு ரோஜாப்பூ கதர் மாலையின் பெருமையை அறிந்துகொள்கிறது: சிங்கம் ஒன்று சத்தியத்தைச் சந்திக்கிறது: வட்டிக் கடை ராமசாமி உழைப்பின் பெருமையை உணர்கிறார். இப்படி எத்தனையோ பல அன்றாட நிகழ்ச்சிகள் மூலம் காந்தியத் தத்துவங்களை ஆசிரியர் நமக்கு விளக்கிக் கொண்டு போகிறார். ஆனால் அதே சமயம் ஏதோ ஒரு நீதியுடன் முடியும் குட்டிக் கதைகளை நாம் படித்துக் கொண்டு போவது போன்ற எண்ணம் ஏற்படாமலிருக்க இவரது அழுத்தமான, கம்பீரமான தமிழ் நடை துணை நிற்கிறது. ஒரு புதுமைப் படைப்பைப் படிக்கும் உணர்வை நூல் ஏற்படுத்துகிறது.

ஒரே ஒரு உதாரணம் பார்க்கலாம். குருக்ஷேத்திரப் போரில் தருமன் ஒரு பொய் சொல்ல நேர்கிறதல்லவா? ஆசிரியர் தொடர்கிறார்:

"பலர் இதற்குப் பலவிதமான சமாதானங்கள் சொல்கிறார்கள்... அவற்றைப் பற்றி நாம் கவலை கொள்ள வேண்டியதில்லை. ஒன்றுமட்டும் உண்மை. தருமனுடைய புகழ் அந்தக் களங்கத்தையும் மறைத்துவிட்டுக் கால வெள்ளத்தைத் தாண்டிக் கொண்டு வந்து நிற்கிறது.

"இங்கு—

"காந்தி தொடங்கிய யுத்தம் காட்டுத் தீ போல நாடு முழுதும் பரவிற்று. அதைச் சமாளிக்க முடியாமல் பிரிட்டன் திகைத்துத் தடுமாறிற்று. வெற்றி நம் கைக்கு எட்டக் கூடிய நிலைமையில் இருந்தது. ஆனால் கிடைப்பதாயிருந்த அந்த வெற்றியை காந்தி என்ன செய்தார்?

"வீசி எறிந்து விட்டார் — போரை நிறுத்தி விட்டார்!

"ஏன்? எங்கோ ஒரு மூலையில் சில காவலர்களை (போலீஸ்காரர்களை) மக்கள் கொளுத்தி விட்டார்களாம். அது அஹிம்சா தர்மத்துக்கு விரோதமாம்!

"உலக வரலாற்றில் இதற்கு ஈடு இணையாக ஏதாவது கூற முடியுமா? காந்தி வெற்றியை மதிக்கவில்லை. அதை அடையும் வழியை, தருமத்தை மதித்தார்."

இரண்டு சம்பவங்களுமே நமக்குத் தெரிந்த விஷயங்கள்தாம். ஆனால் ஒன்றையடுத்து ஒன்றாக இவற்றை மீ. வி. சபரிராஜன் தொகுத்துத் தரும்போது மெய்சிலிர்க்கிறது.

கஸ்தூரிபா கதைகள் என்ற நூலில் 1896 முதல் 1947 வரை அன்னையின் வாழ்க்கையில் நடைபெற்ற நிகழ்ச்சிகள் பலவற்றைத் தொகுத்துத் தருகிறார் திரு கே. எஸ். ஜம்புநாதன். கஸ்தூரிபா என்ற முத்து மாலையில் கோக்கப்பட்டுள்ள நல்முத்துக்களாக ஒவ்வொரு நிகழ்ச்சியும் விளங்குகிறதென்றால் அவற்றின் ஒளியான காந்தீயம் கண்ணைப் பறிக்கிறது.

பண்பாடு உள்ள பெண் எப்படித் திகழ வேண்டும் என்பதற்கு பா எடுத்துக்காட்டாக விளங்கினார். கணவருடன் மாறுபட்ட கருத்துக்கொண்டு அவர் வாதாடிய நிகழ்ச்சிகள் பலவற்றை இந்நூலில் காண்கிறோம். ஆயினும் கணவரிடம் அவர் வைத்த பக்தி கலந்த அன்பு இறுதிவரை சாசுவதமாயிருந்தது.

தனக்கென்று ஒரு தனித்தன்மை இல்லாது போய்விடுமோ என்ற அச்சத்தில்தான், தனக்கு ஏதேனும் ஒரு விதத்தில் ஒரு தனிச் சிறப்பைத் தேடிக்கொள்ள விழையும் அவசரத்தில்தான் இன்றைய நவநாகரிகப் பெண்மணி பல சந்தர்ப்பங்களில் பண்பாட்டை மறந்துவிட நேரிடுகிறது. அவர்கள் பாவின் சரித்திரத்தைப் படித்துப் பெரிதும் பயனுற முடியும்.

காந்திக்கு அருகே வாழ்ந்தும் பாவின் சோபை குன்றவில்லை; சூரியன் முன் நட்சத்திரம் போல அவர் ஒளி மங்கி மறைந்து விடவில்லை. அவரளவில் அவர் ஜொலித்துக் கொண்டுதானிருந்தார். இதை எப்படி அவரால் சாதிக்க முடிந்தது? விடை காணும் ஆர்வமுள்ளவர்கள் இந்நூலைப் படிக்கலாம்.

கஸ்தூரி பாவின் சுருக்கமான வாழ்க்கைச் சரித்திரமும் அவரைப் பற்றிய பிற தலைவர்களின் புகழுரைகளும் பிற்சேர்க்கையாகத் தரப்பட்டுள்ளன.

காந்தி - மீ. வி. சபரிராஜன், தமிழ் எழுத்தாளர் கூட்டுறவு சங்கம், சென்னை-8; விலை ரூ. 2.80. கஸ்தூரிபா கதைகள் - கே. எஸ். ஜம்புநாதன், கௌசிக் பப்ளிகேஷன்ஸ், 29, இரண்டாவது குறுக்குத் தெரு, மேற்கு கே. கே. நகர், சென்னை-35; விலை ரூ. 2.50.

"நீ ரொம்பக் கொடுமைக்காரி!" என்றான் அமிர்தம் பானுவிடம்.

"கொடுமை! என்ன இதிலே?.... ஏதானும் ஒரு காரணத்தினாலே நமக்குப் பிடிச்சவங்களை, இலட்சியப்படுத்திப் பார்க்கிறதுதானே நம்ம சுபாவம்......? ஆனால் அவங்க, நாம அவங்க எப்படி எப்படி இருக்கணும்னு நினைக்கிறோமோ அப்படி இருக்கணும்னு அவசியம் இல்லையே!"

"நீ என்னைப் பத்திப் பேசறயா, இல்லே உன்னைப் பத்தியா?"

பானு புன்னகை செய்தாள். "நீங்க ரொம்பக் கெட்டிக்காரரா், அமிர்தம்..."

"நீ என்னைப் பத்தி என்ன நினைச்சே?"

"இந்த ஹோட்டலுக்கு நீங்க என்னைக் கூட்டிண்டு வருவீங்கன்னு நான் எதிர்பார்க்கலே. நேத்து ராத்திரி என்ன நடந்திருக்கும்னு புரியறது. உங்க நிழலைக் கண்டே உங்களுக்கு இவ்வளவு பயமா?"

# ஹெலிகாப்டர்கள் கீழே இறங்கி விட்டன



''இந்த ஹோட்டலுக்கு அழைச்சுக் கிட்டு வந்ததைப் பத்தி உனக்கு அவ்வளவு கோபமா ?''

''ஆல்ரைட். உங்க மனைவியை 'விவாகரத்து' பண்ணிட்டு என்னைக் கல்யாணம் பண்ணிக்கத் தயாரா, நீங்க?''

''என்னது?'' அமிர்தத்தின் குரல் ஓங்கி ஒலித்தது. அதை அவனால் கட்டுப்படுத்த முடியவில்லை.

பானு சிரிக்கத் தொடங்கினாள். சிரித்து ஓய ஒரு நிமிஷம் பிடித்தது.

''அந்தப் பெண் — அவள் பேர் என்ன சொன்னீங்க — நித்யாவா? அவளை ஏன் உங்களாலே கல்யாணம் பண்ணிக்க முடியல்லேன்னு புரியறது.... உங்களுக்கு இருக்கிற தைரியம் இந்த ஹோட்டலுக்கு என்னைக் கூட்டிண்டு வந்ததிலிருந்தே தெரிஞ்சது..உங்களிடம் எனக்கிருந்த மரியாதையை இழந்து விட்டீர்கள்...மிஸ்டர், அமிர்தம்!''

அமிர்தத்துக்குச் சாட்டையால் அடிப்பது போலிருந்தது. கட்டிலிலிருந்து அப்புறப்படுத்திய அந்த அழுக்குப் படுக்கையைப் போல், அவன் குண இயல்பை ஓர் அழுக்கு மூட்டையாகச் சுற்றி மூலையில் எறிந்து விட்டாள்.

திலகத்துடன் விவாகரத்து என்பது நினைத்துக்கூடப் பார்க்க முடியாத காரியம். அவள் ஒருகாலும் சம்மதிக்கமாட்டாள். கணவனை மையமாக வைத்து எழுந்த சமூக தர்மத்தை வெறும் சட்டத்தின் மூலமாகச் சீர்திருத்தம் செய்ய முடியுமா? — திலகத்துக்கும் அவன் மீது மனப்பூர்வமான ஈடுபாடு இருக்கும் என்று சொல்ல முடியாது.... ஆனால் நம் சமூகத்தில் கணவனைக் காட்டிலும் கணவன் எனப்படும் ஸ்தானத்துக்குத்தான் மதிப்பு அதிகம் என்று பானுவே நேற்று சொன்னாள். இன்னும் சொல்லப் போனால், ஒரு பெண் சுமங்கலியாக இருப்பதற்கு அவள் கணவன் காரணம் என்பதினால்தான் அவனுக்கு மதிப்பு.... இந்தச் சமூகத்தை எதிர்த்துப் போராடக் கூடிய துணிவு தன்னிடம் இருக்கிறதா ?

''சரி, போகலாமா?'' என்று எழுந்திருந்தாள் பானு.

''உனக்குப் புறப்பட விருப்பமானால் சரி... ஆனா நான் சொல்றதையும் நீ கொஞ்சம் கேட்கணும். நாம இப்போ இருக்கிறது ஓர் இரண்டுங்கெட்டான் சமூகம். ஐம்பது வருஷங்களுக்கு முன்னாலே எங்க தாத்தாவுக்கு மூணு பெண்டாட்டிகள். யாரும் புருவத்தை உயர்த்தலே.... நாம இப்போ இருக்கிறது பெண்களை மதிக்கிற சமூகம்னு பேரு. ஒருவனுக்கு ஒருத்திங்கிற நியாயம்.... பெண்களும் 'விவாகரத்து' செய்யலாம்னு சட்டம் சொல்றது. ஆனால் எவ்வளவு பேர் செய்வாங்க? புது தர்மத்திலேயும் புகுந்துக்க முடியாமெ, பழகும் அநாகரிகம்னு சொல்லிக்கிட்டு அவஸ்தைப்படறோம்....''

''சரி, போகலாமா ?''

அமிர்தம் அவளைச் சிறிது கோபத்துடன் பார்த்தான். அவள் கைகளைக் கட்டிக் கொண்டு வேறு எங்கோ பார்த்துக் கொண்டிருந்தாள்.

அறையின் பூட்டை எடுத்துக் கொண்டு வெளியே போகப் புறப்பட்டான் அமிர்தம்.

**அ**ஜ்மீர் கேட்டைத் தாண்டி ஹார்டின்ஜ் பாலம் வரும்வரை இருவரும் பேசாமலேயே வந்தார்கள். கனாட் ப்ளேஸ் வந்ததும் பானுதான் முதலில் பேசினாள் :

''எனக்கு இதுவரை பையன்களைக் கண்டால் பிடிக்காமெ இருந்தது. ஆனா இப்பொத்தான் புரியறது. ஆண்களைப் பொறுத்த வரையிலும் சின்னவங்க பெரியவங்கன்னு ஒன்னும் கிடை



**இந்திரா பார்த்தசாரதி**

பாருங்கள்...வித்தியாசத்தை!

# வெண்மை பளிச்சிடச் செய்வதில் இணையற்றது டினோபால்

விளைவுகளே கூறுகின்றன! துவைத்த துணிகளை அலசுவதற்குமுன் வாளியிலுள்ள தண்ணீரில் சிறிதளவு டினோபால் சேர்க்கவும். பிறகு பாருங்கள் சலவையின் வெண்மை எப்படிப் பளிச்சிடுகிறது என்று! சட்டை, புடவை, படுக்கை விரிப்பு, டவல் எல்லாமேதான்!

இத்தனைக்கும் ஆகும் செலவு, துணிக்கு ஒரு பைசாவுக்கும் குறைவு! டினோபால் வாங்குங்கள். ரெகுலர் பாக், எகானமி பாக் மற்றும் ஒரு வாளித் துணிக்கு ஒரு பாக்கெட் ஆகிய மூன்று அளவுகளில் கிடைக்கிறது.






®டினோபால் என்ற பெயர் ஜே.ஆர்.கெய்கி எஸ்.ஏ. பாஸல் ஸ்விட்சர்லாந்து அதாவது ... ரிஜிஸ்டர்ட் ட்ரேட் மார்க் ஆகும்.

சுஹ்ரித் கெய்கி லிமிடெட், த.பெ 11050, பம்பாய்-20 BR.

Shilpi HPMA 12A/70 Tam

யாது.... எல்லாரும் முட்டாள்கள் !... நான் சொல்றது சரிதானே ?''

அமிர்தம் பதில் கூறவில்லை.

'' உங்களுக்கும் உங்க...மனைவிக்கும் உள்ள பொருத்தமில்லாத தன்மையை ஓர் இலட்சிய வேகத்தோட புரிஞ்சுகிட்டு நான் அநுதாபப்பட்டது வாஸ்தவந்தான்.... ஆனா உங்க மாதிரி இருக்கிறவர்களுக்கு — அதாவது தைரியமில்லாம ஒரு சோகக் காவியத்தின் கதாநாயகன் மாதிரி, ஒடிஞ்சு போன இறக்கைகளை 'ராக்கெட்'னு நினைச்சுண்டு பறக்கப் பார்க்கிற, அரை வேக்காட்டுக் கலைஞர்களுக்கு, ஒரு பிரச்னை ஏற்பட்டால் அதைச் சமாளிக்கிற தெம்பு கிடையாது. சந்தர்ப்பம் கிடைச்சால் அதை அந்தச் சமயத்திலே பயன்படுத்திக்கணும்னு நினைக்கிற சுயநலந்தான் உங்களுக்கு.... எனக்கு ஆண்கள் என்றாலே சலித்துப் போச்சு....!''

''ஆண்களை வெறுக்கிற பெண் இனம் ஒண்ணு மேல் நாட்டிலே உண்டுன்னு கேள்விப்பட்டிருக்கேன்....'' என்றான் அமிர்தம்.

''நீங்க என்ன சொல்றீங்க ?''

''அந்த மாதிரி நீயும் ஆயிடுவே....''

''இதென்ன சாபமா, வாழ்த்தா?''

அமிர்தம் ஒன்றும் பேசாமல் காரை விட்டுக் கொண்டு வந்தான். ஒவ்வொரு பெண்ணிடத்தும் ஆணை வெறுக்கும் தன்மை நிழலாடிக் கொண்டிருக்குமோ? அதே மாதிரி ஒவ்வோர் ஆணிடத்தும் பெண்ணை வெறுக்கும் இயல்பு அடிப்படையில் ஒளிந்து கொண்டிருக்குமோ? டான் — யுவான் பெண்களை வெறுப்பவன் என்று மனோதத்துவ அறிஞர்கள் சொல்லுவார்கள். பாலுறவு என்பது ஆணோ பெண்ணோ ஒருவர் மீது ஒருவர் தீர்க்கும் வஞ்சினமோ?....

ஒருவேளை தான் அவளிடத்து நித்யாவைப் பற்றிச் சொல்லி யிருக்கக் கூடாதோ? இதனால் தான் பாதிக்கப்பட்டதை நேராகச் சொல்லாமல் புத்திசாலித்தனமாக வேறு காரணம் காட்டி விலகிக்கொள்ள முயல்கிறாள். ''நீ என் மானசீகக் காதலி மாதிரி இருக்கிறாய் என்ற காரணத்தால் உன்மீது எனக்கு ஈடுபாடு...'' என்றால் சுயமதிப்புள்ள எந்தப் பெண் இதை விரும்புவாள்?

கார் சப்தர்ஜங் விமான நிலையத்தருகில் வந்து நின்றது. குடியரசு தினத்தையொட்டி ஒத்திகை நடத்திக் கொண்டிருந்த ஹெலிகாப்டர்கள், ஆகாயத்திலிருந்தும் கீழே இறங்கிக் கொண்டிருந்

# கொடுமை நீங்கியது!

தன் ஆட்சியை யாராவது கவிழ்த்து விடுவார்களோ என்று பயந்து போய்த் தன் தேசத்தையே சிறைச்சாலையாக்கினான் சுல்தான். தன் ஒரே மகனை அடைத்து வைத்தான்; ஏன்; தன்னையே அரண்மனையில் தன் ஆசை மனைவியரோடு ஐந்து வருஷங்களுக்கு அடைத்து வைத்துக் கொண்டான்.

ராஜ்ய மக்கள் மிக ஏழைகள்; அவர்களில் பலர் நோயாளிகள். ஆகவே, ஒரு வைத்தியசாலை கட்ட வேண்டும் என்று சுல்தானை அம் மக்கள் நிர்ப்பந்தித்தார்கள். சுல்தான் ஒன்பது வருஷங்கள் வைத்தியசாலை நிர்மாணத்துக்கான வரைபடத்தை ஆராய்ந்தான்; அதில் பல மாறுதல்களைச் செய்தான். இப்படிப் பலவித மாறுதல்களுடன் கட்டடம் கட்டி முடிய இன்னும் ஒன்பது வருஷங்கள் பிடித்தன. பதினெட்டு வருஷங்கள் கழித்து வைத்திய சாலைக் கட்டடம் முடிந்தபோது, சுல்தானுக்குக் கட்டடக் கூரை பிடிக்கவில்லை. ஆகவே கூரை இடித்தெறியப்பட்டது!

மக்கள் தங்கள் சுல்தானை மிகவும் வெறுத்தார்கள். ஆகவே சில மலைப் பிரதேசங்களுக்கு ஓடிப் படைகள் சேர்த்து அவனை முறியடிக்க முனைந்தார்கள். அவன் தன் ராணுவத்துக்கு, உள்நாட்டில் ஆட்களையும் நம்பவில்லை. மற்ற நாடுகளிலிருந்து ஆட்களை வாடகைக்குப் பெற்று, அவர்களைப் போலீஸ்காரர்களாகவும், ராணுவத்தினராகவும் அமைத்திருந்தான்.

கடைசியில் சுல்தானின் மகனுக்கும் சிறை வாழ்க்கை பொறுக்க முடியவில்லை. தந்திரசாலியான அவன் நகரத்திலுள்ள தன் நண்பர்களுக்கு இரகசியச் செய்தி அனுப்பிச் சதி வேலையில் இறங்கினான்.

ஒரு நாள் சுல்தான் மகனது நண்பர்கள் அரண்மனைக்குள் பிரவேசித்தார்கள். சுல்தானைக் கட்டிலுடன் கொண்டு வந்து, முடி துறக்கச் செய்து, பிரிட்டனுக்குத் தூக்கினார்கள். அந்த முதிய சுல்தான் எந்தவிதமோ முயன்று எதிர்க்கப் பார்த்தான். அவனது துப்பாக்கி அவனது காலையே தாக்கியது, சண்டையின் முடிவில் !

இளம் சுல்தான் அரண்மனைக்குள் பிரவேசித்தான்; பொக்கிஷ நிலவறை நிரம்பி வழிந்திருந்தது. தன் தந்தைக்கு நேர்மாறாக நல்ல செயல்களைச் செய்யத் தொடங்கினான் இளம் சுல்தான்.

இது 'அரேபிய இரவுகள்' கதையல்ல. இது மஸ்கட், ஓமன் சுல்தான் சையத்பின் தைமூரின் உண்மைக் கதை. அவனது இருபத்தெட்டு வயது மகன் குவாபஸ்தான் இந்தச் சதித்திருத்த நடவடிக்கையைக் கையாண்டவன்.

குவாபஸ் தன் அறுபது வயதுத் தந்தையைப் பட்டம் துறக்க வைத்தது மட்டுமல்ல; 82,000 சதுர மைலுள்ள இந்தத் தேசத்தை உலகறியச் செய்தான்.

பூமிக்கு அடியிலிருந்து குடைந்தெடுக்கப்படும் எண்ணெயின் மூலமாகவே எழுபத்தைந்து கோடி வருஷ வருமானம் பெறும் ஓமன் செல்வச் செழிப்புள்ள நாடு. அதன் ஏழு லட்சத்து ஐம்பதினாயிரம் மக்கள் இனிமேல்தான் செல்வச் செழிப்பின் பலனை அநுபவிக்க வேண்டும்.

ஆதாரம் : ''ஹிந்து'' தகவல்: பி.எஸ்.எம்.





னை. அதனால் 'கேட்' சாத்தப்பட்டிருந்தது.

''ஹெலிகாப்டர்கள் பூமிக்கு வந்நாச்சு'' என்றான் அமிர்தம். பானு புன்னகை செய்தாள். ''முதல் முதல்லே உன்னைப் பார்க்கிறபோது, ரொம்ப 'சிம்பிள்கேர்ல்' னு நினைச்சேன்.''

பானு இதற்கும் புன்னகை செய்தாள்.

''இன்னொண்ணு சொல்லலாமா?'' என்றான் அமிர்தம்.

''ஓ...பேஷாச் சொல்லலாம்!''

''நித்யாவைப்பற்றிச் சொன்னதாலே உனக்குக் கொஞ்சம் பொறாமையோ?''

பானு வாய் விட்டுப் பெரிதாகச் சிரித்தாள்.

'கேட்' திறந்தது. அமிர்தம் காரைக் கிளப்பினான். எதற்காக இப்படிச் சிரிக்கிறாள் இந்தப் பெண்?—

''இந்த மாதிரி நினைக்கிறதினாலே உங்களுக்குச் சந்தோஷம் ஏற்பட்டால் எனக்கு ஆட்சேபணையே இல்லை.... அப்படியே நினைச்சுக்குங்க...''

**அ**வன் காரை லட்சுமிபாய் நகர்ப் பக்கமாகத் திருப்பினான்.

''கடைசி முறையா இந்தப் பக்கம் வரேன்.... இனிமே வரமாட்டேன்னு நினைக்கிறேன்....'' என்றான் அமிர்தம்.

''இவ்வளவு சீக்கிரம் ஒருத்தராலே 'சென்டிமென்ட' லாக முடியும்னு, அவர்கிட்டே அடிப்படையிலே ஏதோ கோளாறுன்னு அர்த்தம்...'' என்றாள் பானு.

''சரி!... உன் இடம் வந்தாச்சு!...''

அவள் காரிலிருந்து கீழே இறங்கியதும், அவன் அவளிடம் விடைகூடப் பெற்றுக்கொள்ளாமல், காரைத் திருப்பி ஐ. என். ஏ. காலனிப்பக்கம் ஓட்டிச் சென்றான்.

அவன் வீட்டுக்குச் சென்றபோது அது பூட்டி யிருந்தது!

திலகம் ஒருவேளை மார்க்கெட்டுக்குப் போயிருப்பாளோ? சாதாரணமாக அவள் இந்த நேரத்தில் போவதில்லை. பூட்டியிருந்த கதவு அவன் நெஞ்சில் சூன்யத்தை விரித்தது. சிறிது நேரம் அதைப் பார்த்துக் கொண்டு அப்படியே

**''இந்த வருஷம் கொலுவில் உடையாத பொம்மைகளாக வைப்பது என்று தீர்மானித்தோம்...''**

நின்றான். திரும்பிப் போய்விடலாமா? எங்கே போவது? அவன் யாருக்கும் தேவையில்லை. உலகம் அவனைச் சீண்டிச் சீண்டி விளையாடுகிறது. எல்லாரும் ஒதுங்கி நின்று அவன் தடுமாற்றத்தைக் கண்டு கைகொட்டிச் சிரிக்கிறார்கள்.

உள்ளே போகலாமா? — அவனிடம் எப்போதும் ஒரு சாவி உண்டு. உள்ளே போனால் அவன் தனிமை விசுவரூபம் எடுத்து அவனை அச்சுறுத்துமோ?

'ஹிந்து' பத்திரிகை கதவோரமாகக் கிடந்தது. சாயந்திரம் ஐந்து மணிக்கே இப்பத்திரிகை வருவது வழக்கம். அப்படியானால் திலகம் ஐந்து மணிக்கு முன்னாலேயே புறப்பட்டுப் போயிருக்கிறாள். எங்கே போயிருப்பாள்?—

அவன் கதவைத் திறந்து கொண்டு உள்ளே போனான். வீடு வெறிச்சென்றிருந்தது.

மேஜையின் மீது ஒரு கடிதம். அவசரமாகச் சென்று அதை எடுத்துப் பார்த்தான் அமிர்தம்!

**''நீங்கள் எங்கே யாருடன் சென்றீர்கள் என்று எனக்குத் தெரியும். எதற்காக இந்தக் கணவன் - மனைவி நாடகம்? என்னைப் பார்த்துக் கொள்ள எனக்குத் தெரியும்... திலகம்.''**

இதைப் படித்து முடித்தபிறகு அவன் உடம்பு இலேசாக ஆடியது. கையில் இருந்த காகிதத்தைக் கசக்கிப் பையில் போட்டுக் கொண்டான்.

பானுவின் அம்மாதான் வேவு பார்த்து இவனிடம் சொல்லி யிருக்க வேண்டும். அவனுக்குக் கோபம் கோபமாக வந்தது.

திலகத்தால் எங்கு போக முடியும்? அவளுக்கு நெருக்கமான சிநேகிதம் என்று யாரும் கிடையாது. பக்கத்தில் உள்ள இடங்களைத்தவிர சற்றுத் தொலைவான இடங்களுக்கு அவள் தனித்துப் போவதுமில்லை.

பக்கத்துப் பிளாக்கிலிருந்த மிஸஸ் ஐயர் வீட்டுக்குப் போன் செய்தான்.

ஐயர் போனை எடுத்தார். ''எஸ்... ஐயர் ஹியர்...''



ஆச்சரியம்!

**5 விநாடிகளில் ஒரு கப்**
**காப்பி தயாரிக்கலாம்**
**அதுதான் நெஸ்கா:பே.**
**அவ்வளவு குறைந்த நேரத்தில்**
**ஒரு கப் தயார்!**

தென்னிந்திய
காப்பி
விதைகளிலிருந்து
தயாரித்த முற்றிலும்
சுத்தமான
காப்பி




NCE 5750

**உணர்ச்சி ஊட்டும் நெஸ்கா:பே**
**ஊக்கமளித்திடும் நெஸ்கா:பே!**

நெஸ்லே
தயாரிப்பு

''நான்தான் அமிர்தம்... எங்க வீட்டிலே அங்கு வந்திருக்காங்களா?''

''உங்க வீட்டிலியா?... இல்லியே... இருங்க, கேக்கறேன், இதோ பாரு... இங்கே வா... மிஸஸ் அமிர்தம் எங்கே போயிருக்காங்க தெரியுமா? தெரியாதா! தெரியாதாமே... ஏன் என்ன ஆச்சு?''

''நன்றி..... மார்க்கெட்டுக்குப் போயிருப்பாள்னு நெனைக்கிறேன்...''

அவன் அதற்கு மேல் பேச்சைத் தொடர விரும்பாமல் போனைக் கீழே வைத்தான்.

அவன் இன்னும் ஐந்தாறு இடங்களில் விசாரித்தான். ஒரே பதில்... ''ஏன் என்ன ஆச்சு?'' அவனுக்கு எரிச்சலாக வந்தது.

ஒரு வேளை வீட்டிலேயே இருந்து கொண்டு அவனைப் பரீட்சிக்கின்றாளோ? அவன் அறை அறையாகத் தேடினான். சே... என்ன முட்டாள்தனம்! அவள் வீட்டைப் பூட்டிக் கொண்டு போயிருக்கிறாள். வீட்டில் தேடினால்?

'டைனிங் டேபி'ளில் அவன் இரவுச் சாப்பாடு மூடி வைக்கப் பட்டிருந்தது. சமையலைச் செய்து எடுத்துவைத்துவிட்டுப் போயிருக்கிறாள்...

இப்பொழுது என்ன செய்வது?.... போலீசில் சொல்ல வேண்டியதுதானா? 'என் மனைவியைக் காணோம், தேடித் தாருங்கள்' என்றா?... சே! என்ன வெட்கக்கேடு!...காலையில் பார்த்துக்கொள்ளலாம். அதற்குள் அவள் ஏதாவதுசெய்து விட்டால்? — அப்படி யெல்லாம் அவள் செய்யக் கூடியவளல்ல.

அவன் வாசற் கதவைச் சாத்திவிட்டு விளக்கை அணைத்த பிறகு அப்படியே கட்டிலில் சாய்ந்தான். பன்னிரண்டு வருஷங்களை மறந்துவிட வேண்டுமென்று அவன் எண்ணியது இதோ நிறைவேறியிருக்கிறது....இன்றிரவு அவனுக்குத் துணை, அவன் தனிமையும், கனவுகளும் தாம்!...

'உலகத்தையே வீடாகக் கொண்டு ஒரு நிலையிலும், உலகத்தையே வெளியாகக் கொண்டு மற்றொரு நிலையிலும் மனிதன் வாழ்கிறான்' என்பது எவ்வளவு உண்மை! மானிட இயல் கற்பிக்கும் சமூகப் பொறுப்புகளைச் சுமந்துகொண்டு முதல் நிலையில் வாழ வேண்டும். இரண்டாவது நிலையில் மனிதன் தன் சுதந்திரத்தின் எல்லையை உணர்கிறான்.... ஆனால் இச் சுதந்திரம் தனக்கு இப்போது சந்தோஷத்தைத் தருகின்றதா?

வீட்டின் நிசப்தம் இருளோடு சேர்ந்து சதி செய்து அவனைப் பயமுறுத்தியது. கட்டிலில் பக்கத்தில் கிடந்த வெறுமை, 'நீ உன் சுதந்திரத்தை அனுபவிக்கின்றாயா?' என்று கேட்பது போலிருந்தது.

''சாப்பிட வரீங்களா?'' குரல் மிகச் சன்னமாக 'டைனிங் டேபிள்' அருகிலிருந்து ஒலித்தது. அங்கு வரிசையாக அடுக்கப் பட்டிருந்த பாத்திரங்களைத் தவிர வேறொன்றுமில்லை.

அவன் எழுந்து பால்கனிக்குச் சென்றான். எதிரே வரிசை வரிசையாக ஆஸ்பத்திரிக் கட்டிடங்கள், மாடி மாடியாக ஒளிபூத்து நின்றன. உலகத்தையே வெளியாகக் கொண்டு நிற்கும் நிலையில் அவன் ஒரு சின்னஞ் சிறு புள்ளி. இந்தப் புள்ளிக்குத்தான் சிந்தனை, தன்வயமான தர்மம் எல்லாம்!... மந்தையிலிருந்து விலகிச் செல்ல முயன்ற புரட்சி ஆடு!... பொறியில் அகப்பட்ட எலி, விடுதலையைக் கண்டு பயப்படுகின்றது. சமூகம் என்பது தவிர்க்க முடியாத சிறை!... ஒன்று ஞானியாக இருக்க வேண்டும், இல்லாவிட்டால் பைத்தியமாக இருக்க வேண்டும்.... 'தன்வயமான தர்மம்' என்பது அப்பொழுதுதான் சாத்தியம்.

பொறிதான் சொர்க்கம்... அவன், மீண்டும் கட்டிலில் வந்து படுத்துக் கொண்டான். அர்த்த மில்லாத வாழ்க்கைக்கு அர்த்தத்தைக் கற்பித்துக் கொண்டு வாழ்வதுதான் விவேகம். அந்த அர்த்தம் தெய்வமாக மாறுவதை யாரால் தடுக்க முடியும்? ஒரு வேளை இதுவும் இயற்கை நியதியாக இருக்கலாம்.... தலையைப் பிய்த்துக் கொண்டு சூன்யத்தில் ஒடிந்துபோன இறக்கைகளைக் கொண்டு பறக்க முடியுமா? — இறக்கைகளில் சிறிது 'ஒளி' இருப்பது தான் அவன் துர்ப்பாக்கியம்.

உலகம் வீடாக இருந்து விட்டுப் போகட்டும். தன்னால் தனித்து இருக்க முடியாது. திலகத்தைத் தேடியாக வேண்டும். தனித்திருக்கும் போதுதான் தான் தானே தனக்குப் பிரச்னை என்று அவனுக்குப் புரிகின்றது. திலகத்தால்தான், அவனை அவனிடமிருந்து காப்பாற்ற முடியும்.... திலகம் எங்கே?

அப்பொழுது டெலிபோன் ஒலித்தது.



# பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு
## பிரைவேட் லிமிடெட்

(ஸ்தாபிதம்: 1947)

"வீணு விகார்" — 17-A, ஃபிளாங் ரோடு,
ஷண்முகானந்தா ஹாலுக்கு அருகில்
சயான் (கிழக்கு) பம்பாய்-22. D. D.
டெலிபோன்: 471455
தபால் பெட்டி 6759 : : தந்தி: "GROWRICH"

**அக்டோபர் 1970-க்குரிய கீழ்க்கண்ட புதிய குருப்புகள் ஆரம்பிக்கப்படுகின்றன**

*ஏலம் கேட்ட பிறகு டிவிடெண்டு அடையும் வசதியுள்ள கீழ்க்கண்ட குருப்புகள்*

| குறுகிய காலம் : 25 மாதங்கள் | | | நீண்ட காலம் : 40 மாதங்கள் | | |
|---|---|---|---|---|---|
| சேருவதற்கு கடைசி தேதி : 10-10-70<br>முதல் ஏலத் தேதி : 11-10-70 | | | சேருவதற்கு கடைசி தேதி : 24-10-70<br>முதல் ஏலத் தேதி : 25-10-70 | | |
| வகுப்பு | மாதச் சந்தா | சிட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சிட்டுத் தொகை |
| | ரூ. | ரூ. | | ரூ. | ரூ. |
| B | 100/- | 2,500/- | E | 500/- | 20,000/- |
| C | 50/- | 1,250/- | F | 250/- | 10,000/- |
| F | 25/- | 625/- | G | 125/- | 5,000/- |
| G | 20/- | 500/- | | | |

*நீண்ட காலம் : 50 மாதங்கள் — ஏலம் எடுக்காத சிட்டுதாரர்களுக்கு மட்டும் டிவிடெண்டு உண்டு*

**சேருவதற்கு கடைசி தேதி : 17-10-70 :: முதல் ஏலத் தேதி : 18-10-70**

| வகுப்பு | தவணை ரூ. | சிட்டுத் தொகை ரூ. |
|---|---|---|
| LTA | 100/- | 5,000/- |
| LTB | 50/- | 2,500/- |
| LTD | 20/ | 1,000/- |

வேலை நேரம் : { காலை 8 மணி முதல் 10-30 வரை
மாலை 4 மணி முதல் 7-30 வரை

**வார விடுமுறை திங்கட்கிழமை**

தலைமை அலுவலகம் & பதிவு செய்யப்பட்ட அலுவலகம்
"பாலுஸேரி பில்டிங்ஸ்"
3, சிங்கராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி, தபால் பெட்டி : 414, சென்னை - 5

கிளைகள் : பெங்களூர் - கல்கத்தா - புது டெல்லி

இலவச பிரசுரத்திற்கு எழுதுங்கள்

சிட்டுகள் ஒதுக்குதல் கம்பெனியின் உரிமையைப் பொறுத்தது

## எங்கள் சேவை உங்களுக்குத் தேவை

VSK - BBC - KALKI 1010-'70



# ஒரு பத்து ரூபாய் நோட்டு

மலர்மன்னன்

சென்னை மத்திய சிறைச்சாலையில் 'பி' வகுப்புக் கைதியாக நான் அடைபட்டிருந்தபோது 'சி' வகுப்பைச் சேர்ந்த மாரிமுத்துவை என் 'ஆர்டர்லி'யாக நியமித்திருந்தார்கள்.

போதை ஆசையில் விஷம் கலந்த 'பாலீஷை'க் குடித்துவிட்டுப் புற்றீசல்களாய்ச் செத்துப் போனவர்களில் மாரிமுத்துவும் ஒருவன் என்பதைச் சமீபத்தில் தான் நான் தற்செயலாகக் கேள்வியுற நேர்ந்தது. அதுவே மாரிமுத்துவுக்கு எழுத்துருவம் கொடுக்க ஒரு தூண்டுதலாக அமைந்து விட்டது.

இது முழுக்க முழுக்க மாரிமுத்து சம்பந்தப்பட்ட சமாசாரம். இதில் எனது பாத்திரம் கொஞ்சம் போலத்தான். ஆகையால் ஒரு கௌரவமான குடும்பத்தைச் சேர்ந்த நான், 'உள்ளே' போனது எப்படி என்பதைச் சொல்லிக் கொண்டிருக்கப் போவதில்லை. மேலும், நான் உள்ளே போனதற்கான காரணம் தைரியமாகத் தலை நிமிர்ந்து சொல்லிக் கொள்ளக் கூடியதாகவும் இல்லை.

ஜெயிலுக்குப் போனது எனக்கு அது தான் முதல் தடவை. இன்றுவரை அது தான் கடைசித் தடவையும். மறுபடியும் போக ஆசையும் இல்லை.

உள்ளே எனக்குக் கிறுக்கு மேற்குத் தெரியாது. அந்த இடத்துச் சம்பிரதாயம், சட்ட திட்டம் எதிலும் பரிச்சயம் கிடையாது. ஆனால் மாரிமுத்து அப்படியல்ல. அவன் சிறைப் பறவை; நான் போயிருந்த சமயம் அவன் ஐந்தாவது தடவையாகவோ ஆறாவது தடவையாகவோ வந்திருந்தான். வார்டர்களும், 'கான்விக்ட்' வார்டர்களும் பெயர் சொல்லிக் கூப்பிடுகிற அளவுக்கு அவன் உள்ளே பிரபலமாகி யிருந்தான். பெரிய குற்றம் எதுவும் புரிகிற அளவுக்கு மாரிமுத்துவுக்குத் திராணி இல்லை. வெறும் சாராயக் கேஸ்தான். மூன்று மாதங்கள், ஆறு மாதங்கள் என்று வாங்கிக் கொண்டு வந்து போய்க் கொண்டிருந்தான்.

சிறைச் சம்பிரதாயங்களை எனக்குக் கொஞ்சம் கொஞ்சமாகப் போதித்தவனே மாரிமுத்துதான். அந்தஸ்தையைக் கணக்கிட்டும் படிப்பைப் பார்த்தும் என்னைச் சிறைக்குள் 'பி' வகுப்பில் வைக்கும்படி தீர்ப்பாகிவிட்டது. ஆனால் மாரிமுத்துவுக்கு இதற்கெல்லாம் வழியில்லை.

சிறையில் 'பி' வகுப்புக் கைதிகளின் கொட்டடியும் 'சி' வகுப்புக் கைதிகளின் கொட்டடிகளும் பக்கத்துப் பக்கத்தில்தான் இருந்தன. ஆனால் இரண்டு வகை வாழ் முறைகளுக்கும் மலைக்கும் மடுவுக்குமுள்ள வேறுபாடு இருந்தது.

சும்மா சொல்லக் கூடாது. மேல் வகுப்புக் கைதிகளான நாங்கள் உள்ளே சுகமாகத்தான் இருந்தோம். காலையில் கோதுமைத் தோசை, காப்பி, அவரவருக்குக் கொடுக்கப்பட்ட வேலைக்குப் போய்விட்டு முற்பகல் பதினொரு மணிக்கு அறைக்குத் திரும்பியதும் ஒரு குழம்பு கறியுடன் வெள்ளை அரிசிச் சோறு. பலகாரம், சாப்பாடு எல்லாம் அறைக்கே வந்துவிடும். சாப்பாடான பிறகு பிற்பகல் இரண்டு மணிக்குத்தான் மீண்டும் வேலைக்குப் போக வேண்டும். வேலைக்குப் போனால் தண்டனைக் காலத்தில் 'ரெமிஷன்' கிடைக்கும். ஆகவே, வெறுங்காவல் தண்டனை பெற்றவர்கள்கூட வேலைக்குப் போக விருப்பம் தெரிவித்துவிடுவார்கள்.

'சி' வகுப்புக்காரர்களின் கண்களுக்கு நாங்கள் சொர்க்கலோகவாசிகள்தான். சிறையில் அவர்கள் வெறும் ஆட்டு மந்தைகளாகத் தான் வாழ்ந்தாக வேண்டும். வெளியே தனியாக நடமாடக் கட்டுப்பாடுகள் உண்டு. எப்போதும் கும்பலோடு கும்பலாகத்தான் வெளியே வர வேண்டியிருக்கும். வந்தாலும் வரிசையாக அணி அணியாய் ஒருவர் பின்னால் ஒருவராய்த் தரையில் குந்துக்காலிட்டு உட்கார்ந்து கொண்டிருந்துவிட்டு 'கான்விக்ட்' வார்டர் உத்தரவு கொடுத்த பிறகுதான் எழுந்திருந்து நடக்கலாம். அப்போதும் இஷ்டப்படி போய்விட முடியாது. அணி கலையாமல் நடந்தாக வேண்டும். சாப்பிடுகிற போது மட்டுந்தான் கெடுபிடிகள் சற்றுக் குறைவாக இருக்கும்.

சிறையில் இருக்கிறவருக்கு வேண்டப்பட்ட ஒரு நபர் வாரம் ஒரு தடவைதான் வந்து

பார்க்கலாம் என்பதுதான் பொதுவாகக் கடைப்பிடிக்கப்படுகிற விதி. ஆனால் உயர் வகுப்புக் கைதிகள் விஷயத்தில் இதை அவ்வளவு கண்டிப்பாக அனுசரிப்பதில்லை. அதிலும் டெபுடி ஜெயிலருக்கு — எனக்கே ஏன் என்று தெரியாத அளவுக்கு — என்மீது ஓர் ஈடுபாடு.

மனைவியைச் சந்திக்க ஒவ்வொரு முறையும் நான் சிறைச்சாலையின் முன் பக்கத்திலிருக்கிற பார்வையாளர்கள் அறைக்குப் போகிறபோது மாரிமுத்துவும் என் பின்னால் வந்தாக வேண்டும். உயர் வகுப்புக் கைதி ஒவ்வொருவருக்கும் ஓர் ஆடர்லி உண்டு. எனக்கு வருகிற பொருட்களை அவன் சுமந்துகொண்டு வந்து என் அறையில் சேர்ப்பித்தாக வேண்டும். என் அறையைத் துப்புரவாக வைப்பதும் அவன் பொறுப்புத்தான். குடிக்க மண் குடுவையில் தண்ணீர் பிடித்துக் கொண்டு வருவது, படுக்கையைத் தட்டிப் போடுவது, சாப்பாடு கொண்டுவந்து வைப்பது போன்ற எடுபிடி வேலைகளையும் செய்தாக வேண்டும்.

வெய்யில் உறைக்கத் தொடங்காத ஒரு குளிர் காலத்துக் காலை வேளையில் நான் உள்ளே போனேன். சோதனை எல்லாம் முடிந்து எனக்கு ஒதுக்கப்பட்ட அறைக்கு நான் வந்து சேர்ந்த கொஞ்ச நேரத்துக்கெல்லாம் "சலாம் தொரை!" என்றவாறு மாரிமுத்து ஆஜராகி விட்டான்.

தலையைத் தொங்கப் போட்டுத் தண்டனை வாங்கிக் கொண்டு உள்ளே வந்தவனுக்கு இப்படியொரு மரியாதையா என்று ஆச்சரியத்துடன் திரும்பிப் பார்த்தேன். அப்புறம்தான் சிறையில் உயர் வகுப்புக் கைதிகளுக்கெல்லாம் கீழ் வகுப்பிலுள்ள ஒருவனைப் பணியாளாகப் போடும் வழக்கம் இருப்பது தெரிய வந்தது. படிப்படியாகச் சிறையைப் பற்றிய இதர விவரங்களையும் மாரிமுத்துதான் எனக்குச் சொல்லிக் கொடுத்தான்.

தன் உடம்புக்குக் கொஞ்சம் கூடப் பொருந்தாத அழுக்கேறிப் போன அரைக் கைப் பனியனும் அரைக்கால் சட்டையும், தலையில் குல்லாயுமாகக் கன்னங் கரேல் என்று இருக்கும் மாரிமுத்துதான் எப்போதும் என் நினைவில் வருகிறான். அந்தக் கோலத்தைத் தவிர வேறு எந்தத் தோற்றத்திலும் அவனை நான் பார்த்ததில்லை. அவனோடு தொடர்பு ஏற்பட்ட புதிதில் சிநேக பாவத்துடன் அவனைப் பற்றி விசாரித்தேன். அடிக்கடி இப்படி உள்ளே வந்துவிடுவது வழக்கம் என்று அவன் சிரித்துக் கொண்டே சொன்னபோது எனக்கும் கஷ்டமாக இருந்தது.

"நீபாட்டுக்கு இங்கே வந்துடறியே, ஒனக்கு பெஞ்சாதி, பிள்ளை குட்டி எல்லாம் கிடையாதா?" என்று ஒரு தடவை கேட்டேன். அவனைப் பார்த்தால் என்னைவிட இரண்டு மூன்று வயதுதான் பெரியவனாக இருப்பான் போல் தோன்றியது. இன்னும் தனிக்கட்டையாக இருப்பான் என்று தோன்றவில்லை.

"இல்லாம என்ன தொரை? பொஞ்சாதி இருக்கா. நாலு புள்ளைங்களும் இருக்குதுங்க. மூணு பொட்டை, அப்பால் ஒரு பையன்!" என்று சிரித்தான் அவன்.

"சும்மா சும்மா நீ உள்ளே வந்துக்கிட்டேயிருந்தா அவங்க கதி என்ன ஆகிறது?"

"அதுக்கு இன்னா தொரை, நான் இல்லாக் காட்டியும் என் பொஞ்சாதி புள்ளைங்க பொளைச்சுக்கும். நாலு தொளிலு தெரியும் தொரை, எம் பொஞ்சாதிக்கு" என்று பெருமைப்பட்டுக் கொண்டான்.

"நாலு தொழிலா? என்ன அது?"

"சுல்பட்டா விக்கிறது, ஆப்பக் கடை வெக்கிறது, சாணி தட்டறது... சாப்பாட்டுக் கூடை எடுத்துப் போறது... அவ பொளைச்சுக்குவா தொரை...." என்றவாறு ஒரு பீடியை எடுத்துப் பற்ற வைத்துக் கொண்டு உல்லாசமாகப் புகை பிடிக்க ஆரம்பித்தான். அவன் மாதிரி கவலை இல்லாத வேறொரு மனிதனை இதுவரை நான் கண்டதில்லை. அவனுக்கு என்னால் விளைந்த தீங்கு தழும்புபோல் உறுத்திக் கொண்டிருக்கிறது.

சிறையில் பணத்துக்கு வேலையே கிடையாதுதான். ஆனால் திருட்டுத்தனமாக உள்ளே பண நடமாட்டம் இருப்பதுண்டு. பலவீன மனம்படைத்த ஒருசில வார்டர்களைக் கைக்குள் போட்டுக் கொண்டு வாய்க்கு வேண்டியதை வாங்கிச் சாப்பிடவோ வேறு எதற்காகவோ சிலர் கள்ளத்தனமாகப் பணத்தை வைத்துக் கொண்டிருப்பார்கள்.

என் மனைவி பாவம், என்ன நினைத்தாளோ, எனக்கே தெரியாமல் திருட்டுத்தனமாக என் கைக்குப் பணம் வரும்படி செய்துவிட்டாள். சந்திப்பின்போது அவள் இதைப் பற்றி ஜாடையாகக் குறிப்பிட்டிருந்தால் அப்போதே அதற்கு வழியில்லாமல் செய்திருப்பேன். ஆனால் பேச்சு வாக்கில் அவளே அதைப் பற்றி மறந்திருக்க வேண்டும்.

பைபிள் புத்தகத்துக்குள் அடக்கம் செய்யப்பட்டு அந்தப் பணம் என்னிடம் வந்து சேர்ந்தது. பார்வையாளர்கள் கொண்டு வந்து தரும் பொருள்களைச் சிறை அதிகாரிகள் பரிசோதித்துப் பார்க்காமல் கைதிகள் கைக்குக் கிடைக்கச் செய்வது கிடையாதுதான். டெபுடி ஜெயிலரும் ஆரம்பத்தில் இரண்டு மூன்று தடவைகள் என் மனைவி கொண்டு தரும் புத்தகங்களையும் துணிமணிகளையும் தலைகீழாகப் பிரித்து உதறியவர்தான். ஆனால் போகப் போக நம்பிக்கையின் பேரில் அந்தப் பழக்கத்தை நிறுத்திக் கொண்டு விட்டார். என்னைப் பொறுத்தவரை அவர் செய்வது வெறும் சம்பிரதாயப் பரிசோதனைதான். அது என் மனைவிக்குச் சாதகமாகி விட்டது.

அறைக்கு வந்து உட்கார்ந்து கொண்டு புத்தகத்தைப் பிரித்துப் புரட்டி எனக்கு மிகவும் ஆறுதலைத் தருகிற மலைப் பிரசங்கத்தைத் தேட ஆரம்பித்தபோதுதான் உள்ளே பணம் இருப்பது தெரிய வந்தது. அத்துடன் தபால் கார்டு அளவில் எங்கள் திருமணப் புகைப்படமும் வைக்கப்பட்டிருந்தது.

பார்க்க வேண்டும் என்று திடீர் திடீரென்று ஆசை ஏற்படுகிறபோது புகைப்படத்தையாவது பார்த்துத் திருப்திப்பட்டுக் கொள்ளலாமே என்கிற விருப்பில் மனைவியிடம் அவளது புகைப்படம் ஒன்றைக் கொண்டு வந்து தரும்படி கேட்டிருந்தேன். அவள் நாங்கள் இருவரும் இணைந்து எடுத்துக்

# என்ன அருமையான அறுசுவை விருந்து! ஆனல் இதில் கூட போதுமான வைட்டமின் களும் தாது உப்புக்களும் இல்லே



உங்கள் சரீரத்தின் சக்தி, நோயெதிர்க்கும் திறன், வலிமை இவற்றைப் பராமரிக்க சமச்சத்துணவு தேவை. பெரும்பான்மையோர் ஆரோக்கியத்திற்குஎது தேவையோ அதைச் சாப்பிடுவதில்லே—போதாக் குறைக்கு சீதோஷ்ண நிலேயும் அயர்ச்சியை அளிக்கிறது.

ஆகவேதான் 'விடாமினெட்ஸ்' ஃபோர்டே ஒரு வரப்பிரசாதமாக இருக்கிறது. ஒவ்வொரு மாத்திரையிலும் ஆரோக்கியத்திற்கு அத்யாவசியமான சத்துப்பொருள்கள் உள்ளன. 11 வைட்டமின்களும் 5 தாது உப்புக்களும் அடங்கியுள்ளன. ஒரு நாளேக்கு ஒரு மாத்திரை உட்கொண்டாலே அன்றுடத் தேவையான சத்துக்கள் கிடைத்து விடும்.

உங்கள் மருந்து வியாபாரியிடமிருந்து 'விடாமினெட்ஸ்' ஃபோர்டே இன்றே வாங்குங்கள். உங்கள் குழந்தைகளுக்கும் அது தேவை.

'விடாமினெட்ஸ்' ஃபோர்டே —ஜீவ சத்து நிறைந்த மின்னும் சிவப்பு மாத்திரைகள்.

## 'விடாமினெட்ஸ்'

டிரேட் மார்க்

## ஃபோர்டே 'ரோஷ்'

'நாளொன்றுக்கு 15 பைசாவிலும் குறைந்த செலவில் ஆரோக்கியமும் சக்தியும் பெறுங்கள்'

' ரோஷ் ' தயாரிப்பு

ஏகபோக விநியோகஸ்தர்கள்: வால்டாஸ் லிட்.

கொண்ட புகைப்படத்தின் பிரதியையே கொண்டு வந்து கொடுத்து விட்டாள். ஆனால் பணத்தை ஏன் உள்ளே வைத்தாள்?

பையிலைப் பிரிக்கிறபோது மாரிமுத்துவும் என் பின்னாலேயேதான் நின்று கொண்டிருந்தான். பத்து ரூபாய் நோட்டும் புகைப்படமும் திடீரென்று வெளிப்பட்டபோது ''என்ன தொரை அது?'' என்று அசந்து போனான். ''பணத்தை மறைச்சு வை தொரை. யாராச்சும் பார்த்தால் ஆபத்து!'' என்று பதறினான்.

நானும் பதற்றத்துடன் புத்தகத்தைப் படக்கென்று மூடி மேஜையின்மீது வைத்துவிட்டேன். 'எதற்காக இவள் முட்டாள்தனமாக இப்படியொரு காரியம் செய்ய வேண்டும்?' என்று அன்பு மனைவி பாரதி மீது ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. இப்போது இந்தப் பணத்தை என்ன செய்வது? பணம் வேண்டுமென்று சூசகமாகக் கூட நான் அவளைக் கேட்கவில்லை. பாவம், யார் என்ன சொன்னார்களோ? எனக்கு நல்லது செய்வதாக நினைத்துக்கொண்டு அவளாகவே இப்படிச் செய்திருக்கிறாள் என்று தோன்றியபோது அவள் மீது அனுதாபம் ஏற்பட ஆரம்பித்தது. இருந்தாலும் இப்போது இதை என்ன செய்வது?

''ரூவா வேணும்னு அம்மாகிட்ட கேட்டியா தொரை?'' என்று மெதுவாக விசாரித்தான் மாரிமுத்து.

''இல்லேப்பா. எனக்கெதுக்குப் பணம்? வேணுங்கிறதை யெல்லாம் அவளே கொண்டு வந்து கொடுத்து விடுகிறாள். என்ன நினைத்தோ அவளாகவே இப்படிச் செய்திருக்கிறாள். எனக்கு இதனால் ஒரு பிரயோசனமும் இல்லே. ஆபத்துத்தான்...''

''ஆமா தொரை. யாராச்சும் பார்க்கக் கூடாதவங்க பார்த்துட்டா அசிங்கம். பொல்லாப்பும் வந்துபூடும். ரூவா ஒனக்குத் தேவைப்படாதா தொரை?''

''ஊஹூம்...''

''அப்பிடின்னா எங்கிட்ட குடுத்து வை தொரை. நா எங்கிறைச்சும் ஒளிச்சு வைக்கிறேன். நீ போறப்போ திருப்பிக் குடுத்திடறேன். ஊஹூம். அதுகூட 'டேஞ்சர்'தான். போறபோதும் 'சர்ச்சு' பண்ணுவாங்க. நான் வெளியே வரதுக்கு ஒரு மாசம் முந்தியே நீ போயிடுவியே. விலாசம் குடு. வெளிய வந்தவொடனே திருப்பிக் குடுத்துட்றேன்...''

பத்து ரூபாய் எனக்கு ஒரு பொருட்டல்ல. எப்படியாவது அதைக் கழித்துக் கட்டுவதில் தான் குறியாக இருந்தேன். மறுபேச்சுப் பேசாமல் அந்தச் சனியனை அவனிடம் கொடுத்து விட்டேன்.

''நீ ஒண்ணும் எனக்கு இதைத் திருப்பிக் கொடுக்க வேணாம், மாரிமுத்து. நீயே வெச்சுக்க. எது வேணுமானாலும் செய். நெருப்பிலே போட்டுப் பொசுக்கிறதும் பொசுக்கு. எங்கிட்டயே அது இருந்தால் நான் அப்படித்தான் செய்வேன்.''

''சேச்சே, அப்பிடிச் சொல்லாதே தொரை. வெட்கமியாச்சே. நெஞ்சறிஞ்சு நெருப்பு வைக்கலாமா? விலாசம் குடு. நான் வெளியே வந்தவொடனே கொண்டாந்து குடுத்திடறேன்'' என்றான் மாரிமுத்து.

''விலாசம் குடுத்துப் பிரயோசனம் இல்லே மாரிமுத்து. எனக்கு இங்கே இருக்கவே பிடிக்காமப் போச்சு. வெளியே போனதும் டில்லி பம்பாய் கல்கத்தான்னு எந்த ஊருக்காவது ரயிலேறிப்பிட வேண்டியதுதான்'' என்றேன் மனக் கசப்புடன்.

''அதெல்லாம் சும்மா. ஏதோ நடந்துபூடறதுதான். அதுக்காவ சொந்த ஊரை விட்டு ஓடிப்பூட முடியுமா? அப்பிடியே பூட்டாலும் திரும்ப வந்துதான் ஆவணும், தொரை. இப்ப ஒங்கிட்ட வாங்கினது பக்கதீக இல்லே. வாங்கித் துன்னணும்னு நீயா பிரியப்பட்டுக் குடுத்தது இல்லே. கை மாத்துகூட இல்லே. ஒங்கிட்ட இருந்தா டேஞ்சர்னு நானாக் கேட்டு வாங்கி வெச்சுக்கிறது. அதனால கண்டிப்பாத் திரும்பக் குடுத்துத்தான் ஆவணும். நீ விலாசம் சொல்லாக்காட்டியும் எப்படியாவது ஒன்னைத் தேடிக் கண்டு பிடிச்சுத் திருப்பிக் குடுத்திடறேனா இல்லியா பாரு'' என்று சபதம் போடுகிறவன் மாதிரி சொல்லிவிட்டு அந்த நோட்டை நாலாக மடித்துக் குழலாய்ச் சுருட்டி இடுப்பில் எங்கேயோ மறைத்து வைத்துக் கொண்டான். அதற்கப்புறம்தான் அவன் புகைப்படத்தின் மீது கவனம் செலுத்தத் தொடங்கினான். கையில் வாங்கிச் சற்றுத் தூரத்தில் பிடித்தபடி சிறிது நேரம் அழகு பார்த்தான். பிறகு முகம் மலர, ''ராசாவும் ராசாத்தியும் மாதிரி இருக்கீங்க'' என்று 'சர்டிபிகேட்' கொடுத்தான்.

நான் வெறுமனே சிரித்தேன்.



"தொரை! இந்த போட்டோவை எனக்கே எனக்குக் குடுத்திடறியா? ஒன் ஞாபகமா வெச்சுக்கிறேனே" என்று குழந்தை மாதிரிக் குழைய ஆரம்பித்தான்.

"ஆகட்டும். நான் போகிறப்போ குடுத் திட்டுப் போறேன்" என்று சொன்னேன்.

'பீடை தொலையட்டும்' என்று கையி லிருந்த பணத்தை மாரிமுத்துவிடம் கொடுத்து விட்டேனே தவிர, கொஞ்ச நேரத்துக்கெல்லாம் அதனால் அவனுக்கு என்ன நேருமோ என்ற கவலை பிடித்துக் கொண்டு விட்டது. என் கவலையை அவனிடம் வெளியிட்டபோது "அதெல்லாம் பயப் படாதே தொரை. நான் ஒளிச்சுவெச்சா வெச் சதுதான். அப்பால நானுத்தான் அதை எடுத் துக் குடுக்கணும்" என்று அலட்சியமாகச் சிரித்தான் அவன்.

ஆனால் யார் சொல்லிக் கொடுத்தார்களோ, எவன் உளவு பார்த்தானோ, இரண்டு நாட் களுக்குப் பின் ஒரு மத்தியான வேளையில் மாரிமுத்து திருட்டுத்தனமாகப் பணம் வைத் திருந்த குற்றத்துக்காக மூன்றாவது கேட்டில் அடிபடுவதாகக் கேள்விப்பட்டேன். அதைக் கேட்டதுமே எனக்குக் குளிர் எடுத்துவிட்டது. அடி பொறுக்க மாட்டாமல் உண்மையைச் சொல்லி என்னையும் மாட்ட வைத்துவிடு வானோ என்ற பயம் பிடித்துக் கொண்டது. எந்த நேரத்தில் எனக்கு அழைப்பு வருமோ என்ற பீதியுடன் படுக்கையிலேயே சுருண்டு படுத்துக் கிடந்தேன். ஆனால் அதிக நேரம் அப்படிக் கிடக்கவும் முடியவில்லை. சிறிது துணிச்சலை வரவழைத்துக்கொண்டு நெஞ்சு படபடக்க மூன்றாவது கேட்டுக்குப் போய்ச் சேர்ந்தேன்.

அங்கே ஒரு கண்ணறாவியான சம்பவம் நிகழ்ந்து கொண்டிருந்தது.

இடப்புறச் சுவர் ஓரமாக உடம்பில் துணி இல்லாமல் மாரிமுத்து நிறுத்தி வைக்கப்பட் டிருந்தான். அவனது முன்புறம் சுவரை நோக்கி யிருந்தது. அவனது பின்புறத்தை ஒரு 'கான்விக்ட்' வார்டர் நீளமான பிரம்பி னால் அடித்துக் கொண்டிருந்தான். சதைகள் திரண்ட பின்புறத்தில் தோல் பிய்ந்து ரத்தம் வழிந்து கொண்டிருந்தது. ஆனால் மாரிமுத்து வின் வாயிலிருந்து ஒரு முக்கல் முனகல்கூட வெளியே வரவில்லை. எனது சிலுவையை நெஞ்சில் சுமந்து கொண்டு அவன்பாட்டுக்கு மரத்துப் போய் நின்று கொண்டிருந்தான். வலி தாங்காமலோ மனம் பொறுமலோ அடிக் கடி அடிபடும் தனது பின்புறத்தைத் திரும் பிப் பார்த்துக் கொண்டிருந்தான்.

நான் போன சமயம் அவன் சுவரைத்தான் பார்த்துக் கொண்டிருந்தான். கொஞ்ச நேரத்துக் கெல்லாம் திரும்பிப் பார்த்து நானும் அங்கு நிற்பதைக் கண்டுகொண் டான். ஒரு கணம் என்னைப் பரிதாபத்துடன் பார்த்துவிட்டுச் சட்டென்று முகத்தைத் திருப்பிக் கொண்டான். எனக்கு உடம்பெல் லாம் வேர்த்து விட்டது.

அருகில் நின்றவர்கள் நான் விசாரிக்காமலே இரகசியக் குரலில் தகவல்கொடுக்கத் தொடங் கினார்கள். அவனிடம் பணம் இருப்பது எப் படியோ அதிகாரிகளுக்குத் தெரிந்துவிட்டது. கூப்பிட்டு விசாரித்தபோது பணம் வைத் திருந்ததாக ஒப்புக் கொண்டு விட்டான். ஆனால் அந்தப் பணம் எங்கோ தொலைந்து போய்விட்டதாகச் சாதித்தானாம். பணம் எவ்வாறு வந்தது என்பதை எப்படி யெல் லாமோ கேட்டுப் பார்த்தும் அவன் சொல்ல மறுத்து விட்டானாம்.

மாரிமுத்து மேலும் அடிபடுவதைக் காணச் சகியாமல் குற்ற உணர்ச்சி உறுத்த அறைக் குத் திரும்பி வந்தேன்.

அதற்கப்புறம் நான்கு நாட்கள் மாரிமுத்து சிறை ஆஸ்பத்திரியில் கிடந்தான். தினசரி அவனைப் பார்த்துக் கொண்டிருந்தேன். ஆனால் ஒரு தடவைகூட நடந்துபோன சம்ப வம் பற்றி அவன் பேச்செடுக்கவில்லை. யாரும் இல்லாத சமயம் பார்த்து நானாக அது பற்றி மெதுவாகப் பேச்செடுக்க முனைந்தாலும், "விடு தொரை" என்று பேச்சை மாற்றி விடுவான்.

உடம்பு குணமாகி மீண்டும் அவன் எனக் குப் பணிவிடை செய்ய வந்த பிறகும் என்னை அதுபற்றிப் பேச்செடுக்க விடவில்லை. இரவு நேரங்களில் தூக்கம் பிடிக்காமல் படுக்கையில் புரள்கையில், பொழுது புலர்ந்ததும் முதல் வேலையாக என்னால் அவனுக்கு நேரிட்ட துயருக்காக அவனிடம் மனமார மன்னிப்புக் கோர வேண்டும் என்று தீர்மானித்துக்கொள் வேன். ஆனால் பொழுது விடிந்த பிறகு வறட்டுக் கௌரவம் என்னை அந்தச் சாமா னியனிடம் வாய் விட்டு மன்னிப்புக் கேட்க விடாமல் தடுத்துவிடும்.

கடைசியில் வெளியே வரும்வரை அவ னிடம் நான் மன்னிப்புக் கேட்டுக் கொள் ளவேயில்லை. அவனும் அந்தச் சம்பவத்தையே மறந்துபோய்விட்டவன் போலத்தான் நடந்து கொண்டான். நான் வெளியே வந்தபோது ஞாபகமாக எனது புகைப்படத்தை வாங்கி வைத்துக் கொண்டான். விலாசத்தை அவ மட்டும் கேட்டுப் பார்த்தான். சென்னையில் தங்கும் உத்தேசமே எனக்கு இல்லாமல் போயிருந்ததால் விலாசம் கொடுக்காமலேயே வெளியேறி விட்டேன்.

ஆனால் கடைசியில் மாரிமுத்து போட்ட கணக்குத்தான் சரியாகப் ஆயிற்று. ஐந்தே ஐந்து வருடங்கள்தான் வெளி மாநிலத்தில் என்னால் இருக்க முடிந்தது. அதன் பிறகு நிர்ப்பந்தம் எதுவுமின்றி நானாகவே மீண்டும் சென்னை மண்ணுக்குக் குடிபெயர்ந்து வந்து விட்டேன்.

ஊர் திரும்பி வெகு நாட்களான பிறகு தான் அந்தச் சம்பவம் நிகழ்ந்தது. மாரி முத்துவை ஏறக்குறைய நான் மறந்துபோ யிருந்தபோது அது நிகழ்ந்தது...

அந்தக் குச்சு வீட்டின் சாணி மெழுகிய மண் சுவரில் எனது திருமணப் புகைப்படத் தைத் திடீரென்று காண நேரும் என்று நான் சிறிதும் எதிர்பார்க்கவில்லை.

அந்த இடத்துக்கு நான் போனதே தற் செயல்தான். வீட்டில் குழாய் கெட்டுப் போனதால் 'பிளம்பரை'த் தேடிக் கொண்டு யார் யாரை யெல்லாமோ விசாரித்து ஒரு வாறாக அந்த இடத்துக்கு வந்து சேர்ந்தேன். யாரோ கொடுத்த தவறான தகவலை வைத்து அந்தக் குடிசையினுள் புகுந்து விட்டேன்.

# விசேஷ அளிப்பு!

## ஸ்டாக் உள்ளவரை




ஒவ்வொரு டின்னிலும் உள்ள போர்ன்விடாவின் அளவு எப்போதும் போல் தான் (450 கிராம் நெட்)

**சக்திக்கும் வலிமைக்கும்–மற்றும் தீஞ்சுவைக்கும்**

**காட்பரிஸ் போர்ன்விடா!**

Bensons/5322 TAM

மாந்தர்கள் மதிக்கும்
தேவர்கள் களிக்கும்
இழை கோலத்திற்கு

# ஸ்பார்ட்டன் ரங்கோலி பெயிண்ட்

அடிஸன்ஸ் பெயிண்டஸ் &
கெமிகல்ஸ் லிமிடெட்
செம்பியம், சென்னை 11.

அழகுடன் கோலம் போடுவது ஒரு தனிக்கலை. அதற்கு உதவும் . . . அடிஸன்ஸ் பெயிண்ட்ஸ் தயாரித்து அளிக்கும் பெயிண்ட்.

டைட்டேனியம் கலந்த இப்பெயிண்டினால் கோலம் வரைந்து மிகவும் பளிச்சென்ற தோற்றத்துடன் அழகுறச்செய்யுங்கள்.

உலர்ந்தவுடன் கோலமாவு போல் வெடிக்காது சிதறாது உபயோகித்தவுடனேயே தரையில் மிகவும் அழுத்தமாக அமைந்துவிடும். கால் பட்டாலும்கூட வரைந்த கோலம் சிதறாது.

அழித்துவிடுவது மிகவும் சுலபம். மிகவும் சிக்கனம்.

தற்சமயம் வெள்ளை கலரில் கிடைக்கும். விரைவில் நேர்த்தியான பல கலர்களில் கிடைக்கும்.

கிடைக்குமிடம்:

**ஸ்ரீனிவாச காந்தி நிலையம்**

96, மௌப்ரீஸ் ரோடு, சென்னை-18

கிடைக்கும் நேரம்:

காலை 10 மணிமுதல் பிற்பகல் 2 வரை



உள்ளே புகுந்ததும் என் கண்ணில் முதலில் பட்டதே சட்டம் போட்டு மாட்டி வைத்திருந்த அந்தப் புகைப்படம்தான். கண நேரத் தடுமாற்றத்துக்குப் பிறகு எனக்கு நினைவு வந்துவிட்டது.

''அட மாரிமுத்து வீடுதானு இது? மாரிமுத்து...'' என்று உரக்க அழைத்தேன்.

குடிசையின் வலப் பகுதியில் சணல் துணியால் தடுக்கப்பட்டிருந்தது. என் அழைப்பைக் கேட்டதும் துணியை விலக்கிக் கொண்டு ஒருத்தி வெளியே வந்தாள். இந்தப் பெரிய தேசத்தின் பெரும்பான்மை வர்க்கத்தின் ஒரு துளி, விதவைக் கோலம்...

''மாரிமுத்து வீடுதானே இது? எங்கே மாரிமுத்து?'' என்று அவளிடம் ஆவலுடன் கேட்டேன். வந்த வேலை கூட எனக்கு மறந்து போய்விட்டது. அவள் பதில் சொல்லாமல் சோகத்துடன் என்னைப் பார்த்தாள். மேலெழுந்தவாரியாக என்னைப் பார்த்தவள் எதையோ சட்டெனக் கண்டு கொண்டவள் போல் என் முகத்தை உற்றுநோக்கிவிட்டுச் சுவரில் அழுக்கேறிய கண்ணாடிச் சில்லுக்குள் தெரிந்த மங்கலான புகைப்படத்தைப் பார்த்தாள். மறுபடியும் என்னை ஏறிட்டு நோக்கினாள். அவளது முகம் விளக்கேற்றிக் கொண்டது. அவளுக்கு அடையாளம் புரிந்துவிட்டிருக்க வேண்டும்.

''ஐயா, நீங்கதான் அதுங்கூட...'' — மேலும் சொல்லத் துணிவின்றித் தயங்கினாள்.

''ஆமாம், நான்தான். எங்கே மாரிமுத்து?''

அவளிடமிருந்து பதில் இல்லை. ஒரு பெருமூச்சுதான் வெளிப்பட்டது. கண்கள் கலங்கத் தொடங்கின. சிரமப்பட்டுப் பேசத் தொடங்கினாள்.

''அது போயித்தான் வருசம் மூணாகப் போவுதே. ஐயா... அந்தக் கஸ்மாலப் பாலிசைக் குடிச்சுப்புட்டுக் கும்பல் கும்பலாச் செத்துதுங்களே ஜனம், நெனைப்பு இருக்குதுங்களா? இதுவும் அதுங்களோட ஒண்ணாப் போயிடிச்சு ....ம்...'' என்றவள் அப்போதுதான் உணர்ந்தவளாய், ''ஐயா நிக்கறீங்களே... இங்கல்லாம் ஒங்களைக் குந்தச் சொல்லக் கூடாது. வெளியிலே நெனலு இருக்கு. குரிச்சி போடறேன், குந்துங்க. வந்ததுக்கு எதனாச்சும் சாப்பிடாமப் போவலாங்களா? இருங்க சோடா கலர் எதுனாச்சும் வாங்கியாறேன்...'' என்றபடி ஆட்டங் கண்டுபோன ஒரு முக்காலியை எடுத்து வந்து வெளியே போட்டுவிட்டுப் புறப்பட ஆயத்தமானாள்.

எனக்கு அதிர்ச்சியில் பிரமை பிடித்துவிட்டது. அவள் வாசல் குறட்டை விட்டு இறங்கியபோதுதான் சுய உணர்வே வந்தது. அவள் தான் மாரிமுத்துவின் மனைவி என்பதை நானாகவே ஊகித்துக் கொண்டேன்.

''அதெல்லாம் வேண்டாம்மா..... நான் போறேன். என்னால நம்பவே முடியலியே... மாரிமுத்து தவறிட்டான்னு என்னால் நெனைக்கக்கூடப் பார்க்க முடியல்லே...'' என்று குமுறினேன்.

போனவள் திரும்பி வந்தாள். ''ஆமாங்க.. அது எப்பப் பார்த்தாலும் ஒங்க பேச்சையே தான் பேசிக்கிட்டு இருக்கும். ஒங்களை எப்பிடியாவது பார்க்கணும்னு துடியாய்த் துடிக்கும்.

★ காவிரி கடலோடு கலப்பது உண்மை. ஆனாலும் கடல்நீர் முழுவதும் காவிரிக்கு வந்துவிட்டால் காவிரி நீரின் சுவை கெட்டுவிடும். இரண்டுக்கும் உறவில்லை என்றாலோ, காவிரியின் ஊற்றுவளம் குன்றும். எனவே காவிரியும் வேண்டும். கடலும் வேண்டும். காவிரிக்கும் கடலுக்கும் உறவுஇருப்பது போல் உலக மொழிகளோடும் இந்திய மொழிகளோடும் தமிழுக்கும் உறவு இருக்க வேண்டும். ஆயினும் அவைகளோடு கலந்துவிடாமல் தனித் தன்மையோடு திகழவும்வேண்டும்.

★ உத்திரத்திலோ சுவரிலோ புகை படிவது போல மனித மனத்தில் தீமைகள் படிகின்றன. புகை கொஞ்சம் கொஞ்சமாகவே படியும். தீமையும் அப்படியே.

அடிகளாரின் உவமை - தொகுப்பு: 'தேனீ'

கடசிலே பாக்க முடியாமயே போயிடிச்சு...'' என்று புலம்பத் தொடங்கி விட்டாள்.

நான் மௌனமாக நின்றேன். அவளுக்கு எப்படி ஆறுதல் சொல்வது என்று தெரியவில்லை. ஒருவாறு சமாளித்துக் கொண்டு பேச ஆரம்பித்தேன்.

''நீயும் ஒன்னோட குழந்தைகளும் எப்படி இருக்கீங்க? ஒனக்கு எதுனு தேவையானல்..''

அவள் என்னை முடிக்க விடவில்லை.

''அந்த மாரியாத்தா தயவுலே நல்லாத்தான் இருக்குறோம் ஐயா. நாலு ஊடுங்கள்லே வேலை செஞ்சு மானமா பொளைச்சுப் புள்ளிங்களை காப்பாத்தறேன். பசங்க அல்லாம் ஸ்கோலுக்குப் போயிருக்குதுங்க. இல்லாக்காட்டி அதுங்களும் ஐயாவைப் பாத்திருக்கும். ஐயாவுக்குப் பிரியம் இருந்தா ஒங்க ஊட்டிலேயும் பத்துப்பாத்திரம் தொலக்கறதுக்கு வச்சுக்கினு அது போதும்...'' என்று கேட்டுக் கொண்டாள்.

'சரி' என்று தலையாட்டி என் வீட்டை அவளுக்கு அடையாளம் சொல்லிக் குழந்தைகளுடன் ஒரு முறை வருமாறு கூறிவிட்டுப் புறப்பட்டேன்.

வாசலை நான் இன்னும் தாண்டியாகவில்லை. அதற்குள், ''ஐயா, கொஞ்சம் இருங்க'' என்று அவள் குரல் கொடுத்தாள்.

குடிசைக்கு வெளியே வந்து நின்றுகொண்டேன். சணல் தடுப்புக்குள் சென்றவள் எதையோ கொட்டிக் குடைகிற ஓசை கேட்டது. சற்றைக்கெல்லாம் வெளியே வந்தாள்.

''மறந்து பூட்டேன். அது எப்பப் பாத்தாலும் சொல்லிக்கினே இருக்கும். பாலிசு குடிச்சு செத்த அன்னைக்கு ராவிக்கிக் கூடச் சொல்லுக்கினே இருந்துச்சு. இந்தாங்க...'' என்று பயபக்தியுடன் எதையோ நீட்டினாள்.

எனக்கு எதுவும் விளங்கவில்லை. அர்ச்சனைத் தட்டை ஏந்தியதுபோல் இரு உள்ளங்கைகளையும் இணைத்து அவள் ஏந்தியிருப்பது என்னவென்று பார்த்தேன்.

மிகப் பழையதாய்க் கோடு கோடாக மடிப்பு விழுந்து கசங்கிப் பழுப்பேறிப் போன—

ஒரு பத்து ரூபாய் நோட்டு!

"மூப்பது வருஷங்களாய்ச் சம்பாதித்திருக்கிறாய்; நாலைந்து பெண்களையும் பெற்று வைத்துக் கொண்டிருக்கிறாய்; காலணா கூடச் சேர்த்து வைத்துக் கொள்ளவில்லை. கடன் வேறு நிறைய இருக்கிறது என்கிறாள் சாரதா. அவளையும் பெண் குழந்தைகளையும் பிறந்த மேனியாய் வைத்திருக்கிறாய். ஒரு பொன் தோய்த்த மணி இல்லையே உடம்பில்... சே, இதென்ன குடித்தனமடா வேண்டிக் கிடக்கிறது; காப்பியும் சோறும் கன்றுபின்னாத் தீனியும் தின்று வயிறு வளர்த்ததுதான் கண்ட மிச்சம் என்றால், அது சுத்த உதவாக்கரைக் குடித்தனமல்லவா? அழ அழச் சொல்வார் தன் மனிதர், சிரிக்கச் சிரிக்கப் பேசுவார் பிற மனிதர் என்று சொல்வதுண்டு; நானும் ஒன்று மட்டும் சொல்கிறேன். தலைப்பில் முடிந்து வைத்துக் கொள். சரிந்தால் கெக்கெலி கொட்டிச் சிரிக்கத்தான் ஒட்டுறவெல்லாம். ஐயோ பாவமென்று யாரும் வர மாட்டார்கள். ஆக, உன்னைப் பற்றி நான் கேள்விப்பட்டதெல்லாம் நூற்றுக்கு நூறு உண்மை என்று ருஜுவாகி விட்டது உன் குடும்ப நிலை" என்று சற்று நிறுத்தினாள் என் சிறிய தாயார். பாவம், அவள் அறுபது வயதுக்காரி; இத்தனை வேகமாகப் பேசிய படபடப்பு அவளுக்குத் தாங்கவில்லை.

அந்த இடைவெளியில், "சித்தி, எல்லாம் இருந்தது இங்கேயும்; எங்கள் அம்மாவும் அண்ணாவும் நேற்று வரைக்கும், கடைசிக் குழந்தை பிறந்தது வரையிலும்கூடத் தங்களால் முடிந்ததைவிட அதிகமாகவேதான் செய்து என்னை அனுப்பியிருக்கிறார்கள். காப்பு கொலுசு தோங்கட்டான் ஒன்றும் குறைந்ததில்லை ஒரு குழந்தைக்கும். நானும் பத்துப் பன்னிரண்டு பவுனுக்குக் குறையாமல் பூட்டிண்டு வந்தவள்தான். நீங்கள் சொன்னதைக் குற்றமாக நினைத்து இதைச் சொல்லவில்லை. உங்கள் பிள்ளை செய்திருப்பதெல்லாம் உங்களுக்கும் தெரிய வேண்டும் என்றுதான் சொன்னேன். தப்பாக எடுத்துக் கொள்ள வேண்டாம். தவிரவும், இனிமேல் எனக்கு என்ன வேண்டும்? ஒன்றுமே வேண்டாம். பூவும் பொட்டும் மஞ்சளும் குங்குமமுமாய்ப் போய்ச் சேர்ந்தால் போதும் எனக்கு" என்று உள்ளிருந்து குரல் வந்தது. நல்ல வேளை, அந்தக் குரலில் கரகரப்போ, கண்ணீரின் நைப்போ இருக்கவில்லை.

"என்னடி இது; பேசாமல் இரு. நல்ல காலம் வரும். நாணுவும் நன்றாகப் படித்தவன். நாலு பேரைத் தெரிந்தவன். பேரும் புகழும் பெற்றவன்தான். என்னவோ போதாத காலம். காசு பணம் தங்கவில்லை. நீயும் கவனிக்காமல் விட்டு விட்டாய். அவனோ ஊதாரி. நல்லதுக்கா வந்து தொலைந்தது இந்தச் சீட்டாட்டப் பைத்தியம். அதற்காக இப்படியா இவன் சீட்டாடிச் சீட்டாடிக் குடித்தனத்தைக் குட்டிச்சுவராக்கியிருக்க வேண்டும்? எங்கள் அக்கா இருந்திருந்தால் உங்களுக்கு இந்தக் கஷ்டம் வந்தே இருக்காது. குண்டு போட்டுச் கட்டிருப்பாளே இவனை? என்னடா வாயைத் திறக்காமல் உட்கார்ந்திருக்கிறாய், இவ்வளவையும் கேட்டுக் கொண்டு...?"

"வாயைத் திறக்க வழியில்லை; என்ன இருக்கிறது சொல்ல? சித்தி, ஏற்கனவே நொந்துகொண்டு இருக்கேன். சம்பளத்தைத் தவிர மேல் வரும்படி ஏதாவது வந்தால் சமாளித்து விடலாம்; அதற்காக ஏதாவது செய்யலாம் என்று பார்த்தால், கவலையும் கடன்காரர் தொல்லையும் வீட்டில் அடிக்கடி விசும் புயலும் சேர்ந்து என்னை வெளியில் விரட்டி விடுகின்றன. அரட்டையும் வம்புமாய்ப் பொழுதும் போய்விடுகிறது.."

"பொழுது மட்டுமா போகிறது? பணமும் போகிறதே" என்று குறுக்கே பாய்ந்தான் என் சித்தியுடன் வந்திருந்த அவள் பிள்ளை பாலு.

"ஏய் பாலு...! உன்னை...." என்று இழுத்தேன்.

"சும்மா சொல்லு. ஏன் இழுக்கிறாய்? நானும் சீட்டாடுவது உண்டு. குதிரைப் பந்தயத்துக்குக் கூடப் போவதுண்டு. இதோ அம்மா எதிரேதான் இருக்கிறாள். அவளையேதான் கேளேன். குடும்ப நலன் பாதிக்கும்படி எப்போ



## "எண்ணத்தில் உறுதிசெய்து எழிலுடன் வாழுவோமே!"



அண்ணலின் பிறந்த நாளில்
அவர்நமக் களித்துச் சென்ற
பண்புசால் அன்பு மிக்க,
பாதையில் செல்வோ மென்றும்,
மன்னுளோர் போற்ற - நாளும்
மாண்புடன் வாழ்வோ மென்றும்,
எண்ணத்தில் உறுதி செய்து,
எழிலுடன் வாழ வோமே!"

தி. வேங்கடகிருஷ்ணய்யங்கார்

தாவது என்றைக்காவது நான் தோற்றிருக்கிறேனா...என்று அம்மாவே சொல்லட்டுமே."

"நீ வாழ்ந்தாயாக்கும்; உன்னையும்தான் இந்த இழவையெல்லாம் விட்டுத் தொலை என்று முட்டிக்கிறேன்" என்றாள் சித்தி.

"என்றைக்காவது நஷ்டம் தாங்காமல், கஷ்டப்பட்டதுண்டா? நானோ நீயோ இல்லை யாராவது கஷ்டப்பட்டதுண்டா? எனக்கு எப்போது போக வேண்டும், எப்படி ஆட வேண்டும் என்றெல்லாம் தெரியும். 'ஸீஸன்' பார்த்துப் போவேன். இருக்கிற 'நேச்சரை'ப் பார்த்து ஆடுவேன். கொடுத்து வைத்ததை வாங்கிக் கொண்டு வருவது மாதிரி அடித்துக் கொண்டு வருவேன்; இவனைப் போலவா?"

"எல்லா விதத்திலுமே நீ அதிருஷ்டக்காரன். ஆனால் என்னைப் போல..."

"அதெல்லாம் ஒன்றுமே இல்லை. அதற்கெல்லாம் ஒரு வழி வகை, காலம், நாள், நட்சத்திரம், கிரஹம் இப்படி எவ்வளவோ இருக்கின்றன. படிப்பும், புத்திசாலித்தனமும் ஜோஸ்யத்தைக் கிண்டல் பண்ணுவதும் மட்டும் போதுமாடாப்பா..."

நானும் பாலுவும் காவேரிக்குப் புறப்பட்டோம். எனக்கு உள்ளூறப் பயம், வீட்டில் விட்ட இடத்திலிருந்து அவன் பேச்சைத் தொடர்வானோ என்று! நான் நினைத்தபடியே வீடு தாண்டியதும் ஆரம்பித்து விட்டான்:

"நாணு, மஞ்சவயல் ஜோஸ்யரைப் பற்றிக் கேள்விப்பட்டதுண்டோ?"

"கேள்விப்பட்டிருக்கேன்... ஆனால்..."

"நடுவில் பேசாமல் நான் சொல்வதைக் கேட்டுக் கொண்டே வா. கடைசியில் உன் பதிலைச் சொல்லு. அடே, ஏதோ ஒரு செய்தி, விவரம் தெரிந்து கொள்வதைப் போலக் கேளேன்."

"சரி, சொல்லு. நீ எதையும் அழகாய்க் கண் வைத்து, மூக்கு வைத்துப் பேசத் தெரிந்தவன். உன் அரட்டையைக் கேட்டும் அதிக நாள் ஆகிவிட்டது...."

"மஞ்சவயல் ஜோஸியருக்குப் பதினைந்து இருபது வேலி நிலம், நிறைய ரொக்கம் எல்லாம் உண்டு. அவருக்கு அண்ணன் தம்பிகளும் மூன்று பேர் உண்டு. அவர்களுக்கும் சொத்தெல்லாம் உண்டு. அவர்களுக்கெல்லாம் நிறையக் குழந்தை குட்டிகள்; ஜோஸ்யருக்குத்தான் சந்ததியே கிடையாது. எல்லோரும் ஒன்றாய்த்தான் இருக்கிறார்கள். ஜோஸ்யர் அந்தக் காலத்து பி. ஏ.; கும்பகோணம் கல்லூரி மாணவர், பாட்ராச்சாரியார் ஸ்டூடெண்ட். கணக்கில் ஜீனியஸ். ராயப்பேட்டை கிருஷ்ணமாச்சாரியாரிடம் ஸம்ஸ்கிருதம் படித்தவர். அது தவிர, அவருடைய சித்தப்பா ஒருவர். நாலு சாஸ்திரம் வாசித்தவர். அவரிடமும் படித்திருக்கிறார். இன்றைக்கு – ஜோஸ்ய சம்பிரதாயமாய்க் கிடைக்கும் அத்தனை புத்தகங்களையும் பார்த்து, அபூர்வமான ஏட்டுப் பிரதிகளையெல்லாம் வேறு ஆராய்ந்து தெரிந்து கொண்டிருக்கிறார். இவ்வளவுக்கும் மேலே, இன்றைக்கு அவர் ஸ்ரீவித்யையில் ஓர் அதாரிட்டி. நல்ல உபாசகர். அவர் முகத்தில் அம்பாள் பிரசன்னம் சுடர் விடும். நம் வீடு தேடி வருகிறவர்களுக்கு முதல் தரமான காப்பி கொடுத்துச் சாப்பாடும் போட்டு, ஜோஸ்யமும் சொல்லி, அம்பாள் பிரசாதமும் கொடுத்து அனுப்புகிறார். நம் ஜில்லாவில் உள்ள அத்தனை பெரிய மனிதர்களும் அவருடைய நண்பர்கள் என்ன, சிஷ்யர்கள் என்றே வைத்துக்கொள்ளலாம். யார் வந்தாலும் ஜாதகம் பார்த்துச் சொல்வார். விவாகப் பொருத்தம் பார்த்துச் சொல்வார். பீடா பரிகாரம் ஆகிய வழிகளைச் சொல்வார். ஆனால் தமக்கு இஷ்டமில்லை என்றால் தலைகீழாக நின்றாலும் சரி, வந்தவன் கொம்பு முளைத்தவனானாலும் சரி, ஜாதகத்தைப் பார்க்கவே மாட்டார். காரணமும் கேட்கக் கூடாது. கேட்டால் என் இஷ்டம் என்று கோபித்துக் கொள்வார். இதை நானே பல தடவைகள் நேரில் பார்த்திருக்கிறேன்.

"ஒரு சமயம் பாரு, 'ஏய் பாலு, இந்த 'ஸீஸன்' மெட்ராஸ் வேண்டாம். உனக்குக் கோசாரம் சரியில்லை. ஜாக்கிரதை' என்றவர், 'பெங்களூர் போடா, ஜூலை பதினைந்துக்கு மேலே! ரேஸுக்குப் போய்த் தேதியும் நேரமும் எழுதறேன்' என்றார். சொன்னபடியே எழுதவும் செய்தார்."

"அவர் சொன்னபடியே அடித்தும் விட்டாயோ?"

"சந்தேகம் என்ன? இந்தக் குட்டி உஷாவுக்குக் கல்யாணம் பண்ணினேனே, எப்படி? முழுக்க முழுக்கப் பெங்களூர். இல்லாவிட்டால் பி. இ. மாப்பிள்ளைக்கு எங்கே போவேன்? இதெல்லாம் எதற்காகச் சொன்னேன், தெரியுமோ?"

"தெரியும் பாலு. போதும், மேலும் விமரிசனமே வேண்டாம். விமோசனம் வேண்டும் எப்படியாவது. சித்தியிடமும் இவனிடமும் ஒன்றும் சொல்லாதே. நாளைக் காலையில் புறப்பட்டுப் போவோம். எனக்கும் இதுமாதிரி ஏதாவது...."

"அதற்குத்தான் சொன்னேன்; ஆற்றில் போட்டதை அங்குதானே தேடி எடுக்கவேண்

டும். நாமும் என்ன, தேவாரம் பாடிய சுந்தர மூர்த்தியா, ஆற்றில் இட்டதைக் குளத்தில் எடுக்க?"

மஞ்சவயல் ஜோஸ்யர் பார்க்கத் தகுந்தவர் தான்; ஆற்றின் கரையை அடுத்துப் படுகையும் கொல்லைகளும், தோப்பும் துரவும், தோட்டமும் வயல்களும் நிறைந்த வளமான ஊர். தெற்கு வடக்காய் இருபதுக்கு மேற்படாத வீடுகளே இருக்கும் கிராமம் அது; தெரு நடுவில் ஒரு பெரிய வீடு. வாசலில் ஒரு பெரிய கொட்டகை. வீட்டை நெருங்கும் போதே, பூஜை வாசனை கம்மென்று கமழ்ந்தது. ஊதுபத்தி, பன்னீர், பச்சைக் கற்பூரம், சந்தனம், குங்குமப்பூ, பலவித !நன்மலர்கள், தேன் கலந்த அபிஷேக தீர்த்தம், தூபம், நெய் விளக்கு முதலியவற்றின் புண்ணிய வாசனை ஈர்க்கப் பரவசத்துடன் நான் வீட்டுக்குள் புகுந்தோம். முன்கூடத்தில் அகலமான பழங் காலத்துப் பிரம்பு ஈஸிசேரில் கம்பீரமாக வீற்றிருந்தார் ஜோஸ்யர். தாம்பூல வாசனை வீசும் சிரிப்புடன், "வாய்யா... வா...." என்று அமர்க்களமாக வரவேற்றார்.

வீடு முழுவதும் பரவி நிற்கும் தெய்விக மணம், செல்வம் நிறைந்த பெரு வாழ்வைக் காட்டும் பெஞ்சு, நாற்காலிகள், ஊஞ்சல் பீரோக்கள், கடிகாரங்கள், படங்கள் எல்லாம் என்னை எப்படியோ ஆக்கி யிருந்தன. பாலு பழக்கம் உள்ளவனாதலால், பொருந்தச் சென்று பாந்தமாய்ப் பேசிப் பந்தாவோடு அமர்ந்து விட்டான். நான் கூசிக் குறுகிச் சிரமப்பட்டுச் சம்பிரதாயமான இரண்டொரு வார்த்தைகளுடன் நமஸ்காரம் சொல்லிவிட்டு, பாலுவின் பக்கத்தில் ஒண்டிக் கொண்டு உட்கார்ந்தேன்.

"ஏண்டா பாலு, நல்ல 'சான்ஸா' டீ, உனக்கு? ஜோஸ்யரைத் தான் மறந்துவிட்டாய்!" என்றார் அவர்.

"உங்களை மறப்பதா? எல்லாம் உங்கள் சொந்தம்; நானே உங்களுடையவன்தானே" என்றான் பாலு.

"நீ கெட்டிக்காரன் மட்டுமல்ல; பலே போக்கிரிடா நீ! ரொம்ப சந்தோஷம். இவர் யார்?"













"எங்க பெரியம்மாவின் பிள்ளை. ஏதோ சம்பாதிக்கிறான். ஸம்சாரி. செலவாளி. ரொம்பக் கஷ்டப்படுகிறான். ஏகக் கடன் உபத்திரவம்" என்று சொல்லிக் கொண்டே என் ஜாதகத்தை நீட்டினான் பாலு.

விரல் விட்டுக் கணக்கும் போட்டார்.

"பெரியோர்கள் செய்த புண்ணியம். இவருக்குக் குரு பகவான் பலம் நன்றாய் அமைந்திருக்கிறது. அம்சம் அமைத்துப் பார்த்தேன்; அதிலும் குரு ரொம்ப நன்றாய் இருக்கிறார். இல்லா விட்டால் ரொம்பக் கஷ்டம்.... பெரியோர்கள் செய்த பூஜா பலன், பிழைத்து விட்டார். ஒரு குறையும் வராது. இப்போது இவருக்கு, இன்னும் ஒரு வருஷம் குரு கோசாரம் வலுவாய் இருக்கிறது. நீ கூட மாட இருந்து கொஞ்சம் அடித்துக் கொடு. பிழைத்துக் கொள்வார். பாங்கியில் போட முடியாவிட்டாலும், கடன் தீர்ந்து, கல்யாணம் கார்த்திகை பண்ணிவிடலாம். மேற்கொண்டு கிண்டிக் கேட்காதே! உடனே போய் முயற்சி செய்!" என்றார்.

எனக்கு அப்பொழுதே பல ஆயிரங்கள் வந்து விட்டது போன்ற எண்ண நிறைவு ஏற்பட்டது. பாலுவின் துணைகூடத் தேவையில்லை என்று எனக்குப் பட்டது. அடகில் இருந்த பித்தளைகளை விற்றேன், வீட்டிலிருந்த சில சாமான்களைப் போட்டேன். செத்த பிறகு வரும் சேமிப்பிலிருந்து கடன் வாங்கினேன்; ஆசைக் குதிரையில் அமர்ந்து கிண்டிக்குப் பிரார்த்தனை செலுத்தி, முடியும் கொடுத்துவிட்டு மொட்டை யாண்டியாய் நிற்கிறேன். பதினொன்றில் நின்ற குரு பகவான் இப்போது பன்னிரண்டுக்கு வந்திருக்கிறாராம். பதினொன்று லாப ஸ்தானமாம்; பன்னிரண்டு நஷ்டமாம்; இனி எதற்கு நஷ்டம் வரப் போகிறது? மானம் இருந்த தடம்கூட மறைந்து விட்டது! உயிர் இருக்கிறது; ஓய்ந்து ஒடுங்கிய உயிர் இருக்கிறது. பன்னிரண்டுக்கு வந்திருக்கும் குரு பகவானுக்கு இது போதுமோ போதாதோ.... ஜோஸ்யரிடம் போய்த்தான் கேட்டு வர வேண்டும்!



# மணப்பாசி

ப. ராமமூர்த்தி

லட்சக் கணக்கில் சம்பாதித்துச் செல வழித்து ஏதோ ஒரு லட்சியத்துடன் சுமார் ஐம்பது ஆண்டுகள் தனி மரமாக வாழ்ந்து தேக வலிமையும் மன வலிமையும் குன்றாத ஓர் ஆத்மா தன் விடுதலையை விரும்பியோ விரும்பாமலோ அடையத் துடித்துக் கொண் டிருந்தது அந்த அறையிலே.

சிவசாம்பு கட்டிலின்மேல் படுத்து முனகிக் கொண்டிருக்கிறார். அறையில் நர்ஸ் சுகந்தியைத் தவிர யாரும் நடமாடவில்லை. அதிகமாக அவரைத் தொந்தரவு செய்யக் கூடாது என்ற டாக்டரின் கண்டிப்பான உத்தரவு மிகவும் கறாராக நிறைவேறிக் கொண் டிருந்தது.

டாக்டர் அப்படி ஓர் ஆணையிடாமல் இருந்தால் கூட அவரை அதிகமாய் யாரும் அண்டாதபடி மிகவும் அக்கறையுடன் பார்த்துக் கொண்டிருப்பார் அனந்தசயனம். அண்ணனுக்கு 'ஹார்ட் அட்டாக்' வந்துவிட்டதில் அனந்தசயனம் அதிர்ச்சியடையவில்லை. இத்தனை காலம் அந்த 'ஹார்ட் அட்டாக்' ஏன் வரவில்லை என்றுதான் அதிசயப்பட்டுக் கொண் டிருந்தார்.

அனந்தசயனத்துக்கு மட்டுமல்லாது, அவனுடைய ஒரே தங்கையான சுலோசனாவுக்கும் கூடச் சிவசாம்பு ஒரு பெரிய புதிர்தான்.

பணம் சம்பாதிப்பது சிவசாம்புவுக்கு ஒரு விளையாட்டு. எப்படி வருமோ, எங்கிருந்து வருமோ, அவனுடைய பிஸினஸ் என்றுமே பிரமாதமாகச் செழித்துக் கொண்டிருந்தது. அதேபோல் வந்த பணமும் வெகு வேகமாகக் கரைந்து கொண்டும் இருந்தது. வரும் வழி அனந்தசயனத்துக்கும் சுலோசனாவுக்கும் தெரியாதே தவிர அந்தப் பணமெல்லாம் எங்கே எப்படிப் போகிறது என்பதை மட்டும் நன்றாகப் புரிந்து கொண்டிருந்தார்கள்.

சம்பாதிக்கும் பொறுப்பில் எந்த விதமான உபகாரமும் யோசனையும் அவர்களிடமிருந்து சிவசாம்புவுக்குக் கிடைக்கா விட்டாலும், வந்த பணம் இன்ன விதமாய்த்தான் கரைய வேண்டும் என்பதைப் பெரும்பாலும் இந்த இரண்டு பேரும் நன்றாகத் திட்டமிட்டு வந்தார்கள். இவர்களுக்கு எந்த இடத்திலாவது சிறிது தயக்கம் இருந்தாலும் அந்த இடத்தை இட்டு நிரப்ப இருந்தார்கள், அவர்களுடைய பிள்ளைகளும் பெண்களும்.

அனந்தசயனத்துக்கு ஆறு, சுலோசனாவுக்கு நாலு. ஆறும் ஆறுவிதம், நாலும் நாலு விதம்- வேளா வேளைக்கு அதிகாரத்துடன் சாப்பாடு. ஊர் சுற்ற, சினிமாப் பார்க்க, கல்லூரி போக நைட் கிளப் போய்வர — இவர்களுக்குத் தேவையான பணமும் வாகன வசதிகளும் குறைவின்றிக் கிடைத்தன. தமது சந்ததிகளின் டம்ப வாழ்விலே ஒருவித மயக்கம் கொண்டு அவர்களை இஷ்டப்படி திரிய விட்டார்கள் அனந்தசயனமும் சுலோசனாவும்.

சிவசாம்பு உடல் திடமாயிருந்த வரையில் எதைப் பற்றியும் கவலைப்பட்டதில்லை. தம்பியும் தங்கையும் அவர்களுடைய பிள்ளைகளும் பெண்களும் தமது செல்வத்தையும் செல்வாக்கையும் பூரணமாகப் பயன்படுத்துவதில் அவருக்கு எந்த விதமான அக்கறையோ, அருவருப்போ ஏற்பட்டதில்லை.

நிமிஷத்துக்கு ஒரு தரம் 'அண்ணா அண்ணா' என்று குழையும் அந்த இரண்டு பேரும் ஏன் குழைகிறார்கள் என்பது அவருக்குத் தெரிந்த போதிலும் அவர் அதைப் பொருட்படுத்திய தில்லை.

அன்று இரவு சிவசாம்பு நிம்மதியாய் உறங்கி மறுநாள் காலையில் எழுந்தார். டாக்டர் பார்த்துவிட்டு நம்பிக்கை தெரிவித்து இரண்டு இன்ஜக்ஷன் போட்டு, நர்ஸைக் கவனித்துக் கொள்ளும்படி சொல்லிப் போய் விட்டார்.

அனந்தசயனமும் சுலோசனாவும் அண்ணனை நெருங்கிப் பார்த்தனர். ஆனால் அதிகம் பேச முடியவில்லை. பேசினால் லேசாக மார்வலி தோன்றும் அறிகுறி தென்படவே நர்ஸ் அவர்களை அதிகம் பேசாமல் இருக்க உத்தரவிட்டு விட்டாள்.

மறுபடியும் இவர்கள் இருவரும் சிந்தனையில் அமிழ்ந்து ஹாலில் சோபாவே சரணம் என்று உட்கார்ந்து கொண்டனர்.

வெளி வராந்தாவில் யாரோ ''சார்!'' என்று அழைக்கும் குரல் கேட்டது.

''யார்?'' என்று அனந்தசயனம் எழுந்து வாசல்புறம் போனார்.

அட்வகேட் அசுவமேதம் நின்று கொண் டிருந்தார்.

''வாங்க சார், உங்களைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருந்தோம்.''

''எப்படி இருக்கு இப்போ?''

''பரவாயில்லை. இப்படி உட்காருங்கள்.''

வக்கீல் உட்கார்ந்தார். அனந்தசயனமும் சுலோசனாவுக்குச் சாடை செய்ய, சமையல்காரர் ஆவி பொங்கும் காப்பியுடன் வந்தார்.

''இப்போ எதற்குக் காப்பி?'' என்ற அசுவமேதம், அந்தக் காப்பியின் அருமையான நறுமணத்தால் ஈர்க்கப்பட்டு, அதை ஏற்று ஒரு மிடறு காப்பியைக் குடித்தார்.

வக்கீல் மாடியறைக்குச் செல்ல நர்ஸின் அனுமதி கிடைத்தது.

அசுவமேதம் தம் 'ப்ரீப்' சகிதம் மாடிப் படியில் கால் வைத்தார். கூடவே அனந்தசயனமும் சுலோசனாவும் தொடர்ந்தனர்.

''எங்களை மட்டும் தனியே இரகசியமாகச் சந்திக்க வேண்டும் என்று மிஸ்டர் ஜெயராம், தெரிவித்தாராம்...'' என்று தயங்கினார் வக்கீல்.

''பரவாயில்லை. நீங்கள் மட்டும் போங்கள் வக்கீல் சார். ஏதாவது அவசரமாயிருந்தால் நாங்கள் இங்கேயே இருக்கிறோம். காலிங் பெல் அறைக்குள் இருக்கிறது'' என்று தயங்கினார் அனந்தசயனம்.

வக்கீலின் காலடி மாடி யறைக்குள் நுழையும் ஒலி எழுந்தது.

''என்ன அண்ணா! வக்கில் இப்படிச் சொல்லிவிட்டுப் போனாரே! ஏதாவது இசைகேடாக ஆகிவிடப் போகிறதே! நீயும் அவருடன் போகக் கூடாதா?'' என்று கெஞ்சினாள் சுலோசனா.

''அவசரப்படாதே! பொறுத்துப் பார்க்கலாம்!'' என்றார் அனந்தசயனம்.

சுமார் அரை மணி நேரம் ஆகியிருக்கும். ஹாலில் இருந்து தவித்துக் கொண்டிருந்த இருவரும் மாடியிலிருந்து ஏதாவது சத்தம் வருகிறதா என்று ஆவலுடன் காத்திருந்தார்கள்.

வாசலில் ஒரு டாக்ஸி. திறந்திருந்த கதவைத் தாண்டி, தோட்டத்து நடுப் பாதை வழியே மெதுவாக ஊர்ந்து வந்து போர்ட்டிகோவில் நின்றது. சுலோசனா எழுந்து வந்து வராந்தாவில் கம்பீரமாக நின்றாள்.

டாக்ஸியிலிருந்து இரண்டு பேர் இறங்கி மெதுவாகப் படிக்கட்டுகளின் மீது ஏறி வந்தனர்.

வந்தவர்களில் ஒருவர் ஆண். இன்னொருவர் நடுப் பிராயத்துப் பெண்மணி.

ஆணுக்கு இருபத்தைந்து வயதிருக்கும். ஆயினும் துறவிக் கோலம். நல்ல உயரம். சிவந்த மேனி. கம்பீரமான கூர்ந்த பார்வை. சுருண்டு சுருண்ட அடர்ந்த தலைமயிர், மீசை, தாடி. பரந்த நெற்றி. அதிலே சிறிது அகலமான குங்குமப் பொட்டு. ஒரே ஒரு காவித் துண்டை... இடுப்பைச் சுற்றியும் மார்பை மறைத்தும் போர்த்திக் கொண்டிருந்தார். கையிலே ஒரு மான் தோல் பை. அவருக்கு மூத்த சகோதரி போல் தோற்றமளித்த அந்த அம்மாளின் முகத்தில் நன்கு படித்த ஒரு களை. அழகான கண்கள். அந்த அழகை மேலும் எடுத்துக் காட்டும் வில் உயர்ந்த கண்ணாடி. அலை அலையாய் நெளியும் கூந்தல். மிகவும் வசீகரமாய் எடுத்துக் கொண்டையாய்த் திரட்டப்பட்டுக் கறுத்து மின்னிக் கொண்டிருந்தது. நிறம் நல்ல செஞ்சங்கு நிறம். சிவந்த நெற்றியின் நடுவே லலிதமாய்க் கச்சிதமாய்க் குங்குமப் பொட்டு.

அனந்தசயனம் வந்து அவர்களை ஏறிட்டுப் பார்த்தார். அவர் பின்னால் சுலோசனா பூனை போல் வந்து நின்று கொண்டாள்.

வந்தவர்கள் எழுந்து நின்று மௌனமாய் அஞ்சலி செலுத்தினர்.

''யார் நீங்கள்? யாரைப் பார்க்க வேண்டும்?''

அந்த அம்மாள் பதில் சொன்னாள்:

''என் பெயர் பத்மா. இவர் பெயர் சிவானந்தன். நாங்கள் சாரதா ஆசிரமத்திலிருந்து வருகிறோம்! இங்கே அட்வகேட் அசுவமேதம் இருக்கிறாரா? நாங்கள் அவரைப் பார்க்க வேண்டும்.''

''உட்காருங்கள்'' என்று அனந்தசயனமும் சுலோசனாவும் அவர்களுக்கு எதிரிலேயே அமர்ந்து கொண்டார்கள். ''நீங்கள் அட்வகேட்டைப் பார்க்க இப்போது சௌகரியப் படாது.''

சாமியார் நறுக்கென்று பதில் சொன்னார்:

''அவர்தான் இங்கே எங்களை வரச் சொல்



ணார் — மிகவும் அவசரம் என்றும் போன் பண்ணினார்.''

''அப்படியா?'' என்று ஆச்சரியப்பட்ட அனந்தசயனம் ஒன்றும் பேசாமல் எழுந்து உள்ளே போனார்.

தன்னிடம் அந்த அட்வகேட் கூறியது என்ன, இப்போது நடப்பது என்ன?

இரண்டு மூன்று நிமிஷங்களில் அகலமேதும் பரபரப்புடன் இறங்கி வந்தார். வந்தவர் நேரே வாசல் வராந்தாவை நெருங்கிப் பத்மாவையும் சிவானந்தனையும் அவசரமாய் மாடிக்கு அழைத்துப் போனார்.

அவர்கள் மாடிக்குப் போன அவசரத்தைப் பார்த்துப் பிரமித்து நின்ற சுலோசனாவின் சிந்தனை சில நிமிஷங்கள் கழிந்தே அவளுடைய கவனத்துக்குத் திரும்பியது.

''பார்த்தாயா?'' என்று அண்ணனைக் கேட்டாள்.

''பார்த்தேன்'' என்றார் அனந்தசயனம்.

''இவ்வளவு அவசரமாய் அழைச்சுண்டு போறாரே வக்கில். ரெண்டு நிமிஷம் கூட நமக்கு யோசிக்க முடியாமல் போய்விட்டது.''

''எதற்கு? என்ன யோசனை?'' என்று, ஏதோ யோசனையில் மனத்தைச் செலுத்திக் கொண்டே இழுத்தார் அனந்தசயனம்.

''நான் நம்பவில்லை — லேடீஸ் கிளப்பிலே ஒரு மாதிரியாகப் பேசிக் கொண்டார்கள், மிஸஸ் சங்கரனும் மிஸஸ் மாலதியும்.''

''எதைப் பற்றி?''

''எல்லாம் நம்ம சிவசாம்புவைப் பற்றித்தான். அப்போதெல்லாம் ஏதோ வம்பு என்று ஒதுக்கிவிட்டேன், காதிலே கூடச் சரியாக வாங்கிக் கொள்ளாமல். இப்போதுதான் புரிகிறது, நெருப்பில்லாமல் அந்தப் புகை வரவில்லை என்று!''

''நீ என்ன சொல்றே சுலோ?''

''அண்ணா! பெரியண்ணாவின் காரியத்தைப் பார்த்தாயா? கிளப்பிலே பத்மா பத்மா என்று அவர்கள் வம்பளந்தபோது நான் நம்பவில்லை. இப்போது நேரிலேயே அவள் வந்துவிட்டாள் — அதுவும் இந்த மாதிரி சமயத்தில் — நம்பித்தான் ஆகவேண்டியிருக்கிறது!''

''எனக்கு ஒன்றும் புரியவில்லை சுலோ! பாவம். அவர்கள் யாரோ — பார்த்தால் நல்லவர்களாக இருக்கிறார்கள். வக்கில் மூலமாய்ச் சிவசாம்புவைச் சந்தித்து ஏதாவது பண உதவியைப் பெற வந்திருக்கலாம் — அதற்குள் நீ ஏன் இப்படியெல்லாம் குழம்புகிறாய்?''

''நான் ஒன்றும் குழம்பவில்லை. நீதான் ஓர் அப்பாவி! அண்ணாவை ஏதோ ஒரு சாதுப் பசு என்று நம்பிவிட்டாய் — அந்த அம்மாள் அழகாயில்லையா?''

''அழகாய்த்தான் இருக்கா. அதனாலே?''

''இவ்வளவு சீரியஸாய் அண்ணா படுத்துக் கொண்டிருக்கும்போது என்ன தைரியமாய் வீடு தேடி வந்துவிட்டாள், பார்த்தாயா? வெட்கக்கேடு! இவனும்தான் என்ன? பணமில்லையா, அந்தஸ்தில்லையா, அழகில்லையா? எதிலே குறைச்சல் சாம்புவுக்கு! — ஒழுங்காக அந்த நாளிலே நல்ல இடத்திலே ஒரு கல்யாணம் செய்து கொண்டு நாலு பேர் மெச்ச வாழ்ந்திருக்கக் கூடாதா? இந்த மாதிரி காரியங்களை வைத்துக் கொண்டு — முடியாமல் படுத்துக் கொண்டு யாரோ ஒரு நர்ஸுக்கு அடங்கிக் கொண்டிருக்கும்படியாக என்ன தலைவிதி! பாவம்... இந்தப் பத்மாவைப் பார்க்க முடியாமல் தவித்து வக்கிலிடம் சொல்லி வரவழைத்திருக்கிறான். இவள் கெட்ட கேட்டுக்கு யாரோ ஒரு சந்நியாசி வேறு துணை!... ம் ... காலம் ரொம்பக் கெட்டுவிட்டது. இவ்வளவு தூரம் வந்து விட்ட பிறகு என்ன? நீ போய்ப் பார். அவர்கள் மாடியிலே என்னதான் முடிவு செய்கிறார்கள் என்பதை!''

''வேண்டாம் சுலோ! இதெல்லாம் உனக்கும் எனக்கும் சம்பந்தமில்லாத விஷயம். அவர்கள் ஏதோ ஆசிரமம் என்று வந்திருக்கிறார்கள். ஆயிரமோ இரண்டாயிரமோ வாங்கிக்கொண்டு போனால் போகட்டுமே!''

இதற்குள் மாடி அறையிலிருந்து வக்கில் வெளியே வந்தார். அனந்தசயனத்தை மாடிக்கு அழைத்தார். அனந்தசயனம் மாடிக்குப் போனார். மாடியிலிருந்தபடியே சுலோசனாவையும் அழைத்தார். அவளும் மாடி ஏறி அவசரமாகப் போனாள். சிவசாம்புவின் அறையை அடுத்த ஹாலுக்குள் மூவரும் நுழைந்து உட்கார்ந்து கொண்டனர்.

வக்கில் அவர்கள் இருவரையும் ஒருமாதிரி கலக்கத்துடனும் தயக்கத்துடனும் பார்த்து மெதுவான குரலில் பேச ஆரம்பித்தார்.

''மிஸ்டர் அனந்தசயனம்! கொஞ்சம் அந்தக் கதவுகளைத் தாழிட்டு வாருங்கள். சுலோசனா அம்மா, கொஞ்ச நேரம் நாம் மூன்றுபேர் மட்டும் இங்கே இருக்க வேண்டும். உங்களுக்கு ஏதாவது அவசர வேலை இருக்கிறதா?''

''ஊஹூம். — அதுசரி வக்கில் சார். நீங்கள் வரச் சொன்னதாக வந்தார்களே அவர்கள் இரண்டு பேரும் இன்னும் அண்ணாவுடன்தான் இருக்கிறார்களா? அவர்கள் யார்? எதற்காக இப்போது இங்கே வந்தார்கள்?'' என்று பரபரப்பாகக் கேட்டாள் சுலோசனா.

''அவர்களைத் தம்மிடமே நிறுத்திக் கொண்டார் சிவசாம்பு. இன்னும் கொஞ்ச நேரம் கழித்து நாம் எல்லோருமாய் அவர்களைப் பார்ப்போம். இப்போது அதைவிட முக்கியமான விஷயம் ஒன்றை நான் உங்களுக்குச் சொல்லக் கடமைப்பட்டுள்ளேன்'' என்று தமது ஃபிரீப் கேஸைத் திறந்து ஒரு கட்டுக் காகிதங்களை எடுத்தார். அதை மெதுவாகப் பிரித்தவாறே ''மிஸ்டர் அனந்தசயனம், இது உங்கள் தமையனார் சிவசாம்புவின் உயில்! படிக்கட்டுமா?'' என்றவர், ''மிஸ்டர் அனந்தசயனம்! உங்களுக்கும் உங்கள் சகோதரிக்கும் ஆளுக்குச் சுமார் இரண்டு லட்சம் எழுதியிருக்கிறார். அது தவிர பத்மா என்பவருக்கு இரண்டு லட்சமும் அந்த சன்யாசி மூலம் சாரதா ஆசிரமத்துக்கு ஒரு லட்சமும் எழுதியிருக்கிறார்!'' என்றார்.

''சுலோசனா! நீ நினைத்தது சரிதான் — வக்கில் ஸார்! இது ரொம்பக் கொடுமை!'' என்று கத்தினார் அனந்தசயனம்.

வக்கில் சமாதானப்படுத்தினார்.

''பொறுமையாயிருங்கள் சார். பதறாதீர்கள். அவருக்கு உடம்பு மோசமாயிருக்கிறது. குறுக்கே அதிகமாக நான் எதுவும்

கேட்க முடியவில்லை. சட்டப்படியும் அவர் செய்வதில் யாரும் குறுக்கிட முடியாது.''

''அந்தப் பெண் யார் சார்? அந்தப் பரதேசிப் பயல் எங்கே யிருந்து வந்தான் பங்காளியாக?'' என்று இரைந்தார் அனந்தசயனம்.

''அந்த விவரங்கள் எனக்கும் சரியாகத் தெரியாது. நீங்கள் நிதானப்படுத்திக்கொள்ளுங்கள். நாம் உள்ளே போய் அவர்களைச் சந்திப்போம். நீங்கள் இரண்டு பேருமே, உங்கள் தமையனைக் கேட்கலாம். ஆனால் ஒன்று மட்டும் மனத்தில் திடமாக வைத்துக் கொள்ளுங்கள். அவருக்கு அதிர்ச்சி ஏதும் உண்டாக்காமல் எதையும் செய்ய வேண்டும். இல்லாவிடில் முடிவு பயங்கரமாகிவிடும்!'' என்றார் வக்கீல்.

என்னதான் சமாதானப்படுத்திக் கொண்டாலும் அவர்கள் இருவருடைய நெஞ்சமும் படபடப்பைக் குறைக்கவில்லை.

**ப**டுக்கையை விட்டு எழுந்திராமலே சிவசாம்பு இலேசான குரலில் தம் தம்பியை வரவேற்று அமரச் சொன்னார்.

அந்த அறையின் எதிர் மூலையில் ஓர் இரட்டை சோபாவில் உட்கார்ந்து கொண்டிருந்த பத்மாவும் வாலிபர் சாமியாரும் அனந்தசயனத்தைக் கண்டு மெதுவாக எழுந்திருக்க முயன்றார்கள்.

இதற்குள் கயிலாசமும் வக்கீலும் சந்தடியில்லாமல் அறைக்குள் நுழைய, சிவசாம்பு தம் வேதனையையும் மறைத்துக் கொண்டு இலேசாகப் புன்முறுவலித்துத் தமது தம்பியையும் ஆர்வத்துடன் வரவேற்றார்.

இவர்கள் ஒன்றாக இருக்கும்போது தாங்கள் அந்த அறைக்குள் இருப்பது தகாது என்று உணர்ந்தவர்கள் போல் பத்மாவும் அந்த இளைஞரும் தயங்கிக் கொண்டு நின்றனர்.

சிவசாம்பு மெல்லிய குரலில் அவர்களை அழைத்துச் சற்று நேரம் அடுத்த அறையில் சென்றிருக்குமாறு கேட்டுக் கொள்ள அவர்களும் மௌனமாக அறையை விட்டு வெளியே சென்றனர்.

''மிஸ்டர் அகளமேகம்! நீங்களும் போய் அவர்களுடன் பேசிக் கொண்டிருங்கள்!'' என்று வக்கீலையும் பக்குவமாக வெளியே அனுப்பிவிட்ட சிவசாம்பு தம் கூடப் பிறந்தவர்களைக் கனிவுடன் பார்த்தார்.

கடிக்க வேண்டும் என்று சீறிப் படமெடுத்த பாம்பு ஏதோ ஒரு காரணத்தால் திடீரென்று தணிந்து சுருங்கி விழுந்தது போல் ஆகிவிட்டார் அனந்தசயனம்.

''என்ன அனந்தசயனம்! கயிலாசம், என்மேல் கோபந்தானே?'' என்று கேட்ட சிவசாம்பு தமக்குள் சிரித்துக் கொண்டார்.

''உங்கள் மேல் நான் எப்படிக் கோபிக்க முடியும் அண்ணா? எனக்கென்ன உரிமை, அதற்கு?'' என்றார் அனந்தசயனம். வார்த்தையில் இல்லாத கோபம் உள்ளத்தில் கொதித்துக் கொண்டிருந்த உண்மையை அவருடைய குரல் பிரதிபலித்ததைச் சிவசாம்பு புரிந்து கொண்டார்.

''என்ன இருந்தாலும் இப்ப[illegible] செய்வாய் என்று நாங்கள் எண்ணவில்லை!'' ன்று கயிலாசம் மட்டும் வார்த்தையால் இழுத்தான்.

''நான் செய்கிறேன் என்று எதையுமே உரிமை கொண்டாடும் வழக்கம் என்னிடம்

இடையாதே கலோ! இந்தக் காரியம் மட்டும் அதற்கு விலக்கா என்ன? இந்த வேளையில் இப்படிச் செய் என்று எனக்கு ஓர் உணர்ச்சி—செய்துவிட்டேன்.''

''உனக்குச் சரி என்று தோன்றினால் நாங்கள் என்ன செய்ய முடியும்?'' என்று கலோசனு முனகினான்.

''அண்ணா! நீ எங்களுக்கு ஒன்றுமே கொடுக்காமலிருந்தால் கூட நான் வருத்தப்படமாட்டேன். யாரோ ஒருத்திக்கும் ஒரு சத்திரமாசிக்கும் எங்களுக்குச் சமமாகத் திர்மானித்து விட்டாயே! அது என்ன நியாயம்?'' என்று கொஞ்சம் சூடாகவே கேட்டார் அனந்தசயனம்.

''ம்—'' என்று கொஞ்சம் அழுத்தமாக, கம்பீரமாகக் கர்ஜிக்கும் குரலில் இழுத்த சிவசாம்பு அதைத் தொடர்ந்து சற்று வெளிப்படையாகவே —' சிறிது கலகலப்பாகவே சிரித்தார்.

''அனந்தசயனம்! கலோ! நான் உங்களுக்கெல்லாம் ஒரு புதிர்தானே? இப்போது ஒரு சின்னக் கதை சொல்லுகிறேன். குறுக்கே எதுவும் கேட்காமல் பேசாமல் கவனியுங்கள். முடிந்த பிறகு உங்களுடைய அபிப்பிராயத்தைச் சொல்லுங்கள்!

''எனக்கு அப்போது இருபது வயசு. கல்லூரியிலே எம். ஏ. கடைசி வருஷம் படித்துக் கொண்டிருந்தேன். எனக்கு நெருங்கிய கல்லூரி சிநேகிதன் ரங்கரத்தினம். நாங்கள் மிகவும் உயிருக்கு உயிராகப் பழகினோம். ஒரே அறையில் வாசம்; ஒரே படிப்பு; ஒரே ஹோட்டல் சாப்பாடு. பார்த்தால் ஒரே சினிமா பார்ப்போம். ஒரு நாள் கூட இணை பிரியாமல் இருந்தோம்.

அவனுக்குப் பதினைந்து பதினாறு வயதில் ஓர் அழகான தங்கை. ராணி மேரி கல்லூரியில் இண்டர் முதல் வருஷம் படித்துக்கொண்டிருந்தாள்.

ரங்கரத்தினம் எம். ஏ. முதல் வகுப்பில் பாஸ் பண்ணி விட்டான். அவன் தங்கை—அவள் பேரைச் சொல்லவில்லையே நான்—அவள் பெயர் பத்மா. ஒரு நாள் இரவு பத்து மணி இருக்கும் — ரங்கரத்தினம் ஓடி வந்தான்.

''சிவசாம்பு — சிவசாம்பு....'' என்று என்னிடம் பதறிக் கொண்டே வந்தான்.

''என்ன ரங்கரத்னம், ஏன் இப்படி நடுங்குகிறே, என்ன நடந்தது?'' என்று கேட்டேன்.

அவன் பதில் பேசவில்லை. என்னைக் கட்டிக் கொண்டு குலுங்கிக் குலுங்கி அழுதான்.

''சிவசாம்பு, நான் செத்துப் போகப் போகிறேன். அதற்கு முன்னால் உன்னைக் கடைசித் தடவையாகப் பார்க்க மனசு அடித்துக் கொண்டது. ....சிவசாம்பு என்னை மன்னித்துவிடு — நான் இப்போது ரயில் தண்டவாளத்தை நாடி ஓடப் போகிறேன். நானும் நீயும் சேர்ந்து கட்டின மனக் கோட்டை யெல்லாம் வெறும் மண்கோட்டையாகத் தகர்ந்து பிளந்து விழுந்து விட்டது.''

''என்னதான் நடந்து விட்டது, ரங்கரத்னம்? நான் இருக்கும்போது நீ ஏன் இப்படித் துடிக்கிறாய்? விஷயத்தைச் சொல்'' என்றேன்.

''சிவசாம்பு! நாங்கள் நாசமாகிவிட்டோம் பத்மா... பத்மா... நான் எப்படிச் சொல்வேன் அந்தப் பயங்கரத்தை... நேற்று அவளும் ஒரு சிநேகிதியுமாக எங்கேயோ மகாபலி








"டிபன் பாக்ஸில் இன்று என்ன டிபன் வைக்க?"
"மிளகாய்ப்பொடி மட்டும் வை போதும்! தொட்டுக் கொள்ள இட்டிலியை நான் டெஸ்பாட்சிடம் வாங்கிக் கொள்கிறேன்!"

---

புரம் போனார்கள்... அங்கே....அங்கே...."
வார்த்தைகளைத் தொடர்ந்து முடிக்க மிகவும் இணறினன்.

சில நிமிஷங்களில் தன்னைச் சுதாரித்துக் கொண்டு அவன் மிகவும் ரகசியமாக என்னிடம் தெரிவித்த அந்த நிகழ்ச்சி என் மனத்தில் ஒரு பெரிய இடிபோல் ஒலித்தது.

"பத்மா இப்போது எங்கே?"

"வீட்டில் இருக்கிறாள். நேற்று ராத்திரி பதினொரு மணிக்கு அலங்கோலமாய்த் திரும்பி வந்தாள். ஒரே அழுகை. இரவு ஒரு விநாடியும் நாங்கள் யாரும் தூங்கவில்லை. பகலும் அப்படியே கழிந்தது. கடைசியாக நானும் பத்மாவும் தனித் தனியே எங்காவது போய்ச் சாவது என்று தீர்மானித்துக்கொண்டோம்....."

"அடப் பாவி! என்ன காரியம் செய்யத் துணிந்தாய்?" என்றவன் அவனையும் அழைத்துக் கொண்டு அவன் வீட்டுக்குக் கிளம்பினேன்.

பதினைந்து நிமிஷங்களில் பத்மாவை வீட்டில் கண்டோம். பத்மாவின் தாயார் அதிர்ச்சியில் மயங்கி அரற்றிக் கொண்டிருந்தாள். பேசுவதெல்லாம் நானே பேசினேன்.

காலம் யுத்த காலம். பத்மாவின் வாழ்வைக் கெடுத்த பாவிகள் யாரோ முகம் தெரியாத முரட்டு ஆங்கிலச் சிப்பாய்கள்.

என்ன செய்வது !

நடந்தது ஏதோ நடந்து விட்டது. நடக்க வேண்டியதைச் சிந்திக்க வேண்டிய சிக்கலான சமயம் !

பத்மா, அவளுடைய தாயார் — ரங்கரத்னம் தவிர இரண்டு சிறு குழந்தைகள். பெரியவன் வயது ஐந்து. சின்னவள் வயது இரண்டு. தகப்பனார் காலமாகி இரண்டு ஆண்டுகள் ஆன குடும்பம் ! பண வசதி இருந்தது.

உலகத்தில் கிடைக்கும் தைரியத்தை எல்லாம் உள்ளத்திலே வாங்கி நான் ஒரு முடிவுக்கு வந்தேன்.

நடந்ததை உலகத்துக் கண்களிலிருந்தும் மறைத்து, யாருக்கும் தெரியாத ரகசியமாக இப் பத்மாவை மேலும் படிக்க வைத்து ஒரு விடுதியில் வாழ விடுவது என்று தீர்மானித்தேன். அந்த விடுதி சாரதா ஆசிரமம் !

அந்த நாள் முதல் இந்த நாள் வரை பத்மாவை நான் மறக்கவில்லை — இப்போது அவள் பத்மா எம். ஏ. எம். லிட். ஒரு பேராசிரியை.

அவளை ஆசிரமத்தில் சேர்த்த ஓர் ஆண்டுக்குள் ஓர் ஆண் குழந்தை பிறந்தது. அதுவும் அங்கேயே வளர்ந்து விவரம் தெரிந்த பிறகு சமூக வாழ்வில் புக விரும்பாமல் இளம் வயதிலேயே சன்யாச தீட்சை பெற்றுக் கொண்டு சிவானந்தனும் மாறியது."

கலாவும் அனந்தசயனமும் பிரமித்து உட்கார்ந்து விட்டார்கள்.

"என்ன இப்படி இரண்டு பேரும் பேசா மடந்தையாகி விட்டீர்கள் ?"

"என்ன அண்ணா பேசுவது ! நீ சொன்னதைக் கேட்டால் மிகவும் பயங்கரமாயிருக்கே! அந்த ரங்கரத்னம் இப்போது எங்கே?.... நீ செய்ததெல்லாம் சரிதான். ஆனால் பத்மா தான் தானே சம்பாதித்து நல்ல நிலைக்கு வந்து விட்டாளே. உன்னுடைய உதவி எதற்கு இப்போது ?"

சிவசாம்பு மறுபடியும் சிரித்தார்.

"கலோசனா, மறுபடியும் நீ ஓர் அவசர புத்தி படைத்த பெண் என்பதை நிரூபித்து விட்டாயே !.... ரங்கரத்னம் உங்களுக்கெல்லாம் ரொம்பத் தெரிந்தவன்தான். அவனுடைய மற்ற இரண்டு உடன்பிறப்பும் உங்களுக்குத் தெரிந்தவர்களே. அந்தப் பயங்கரச் சம்பவம் நடந்த போது ஐந்து வயதும், இரண்டு வயதுமாயிருந்த அவர்களுக்கு இப்போது ஆறு குழந்தைகளும், நாலு குழந்தைகளுமாக நன்றாக நல்ல குடும்பமாக, கௌரவமாகத்தான் வாழ்கிறார்கள் !

"பாவம், ரங்கரத்னம் மட்டும்தான் கல்யாணமே செய்து கொள்ளவில்லை — பத்மாவுக்குத் தன் தம்பியையும் தங்கையையும் நன்றாகத் தெரியும் ! பாவம், அவர்களுக்குத்தான் அவளைப் புரியவில்லை — "

"நீ என்னதான் பேசறே, சிவசாம்பு !"

" அனந்தசயனம்! நீ போய் அவர்கள் மூவரையும் இங்கே அழைத்து வா!" என்றார் அண்ணன்.

அனந்தசயனம் வெளியே சென்றார்.

"கலோசனா! உனக்கு ரங்கரத்னத்தைக் காட்டட்டுமா ?"

"எனக்கென்னவோ ஒன்றும் புரியவில்லை."

"கலோ, அந்தக் கதையில் வரும் ரங்கரத்னம் பாத்திரமும் நான்தான்!" என்றார் சிவசாம்பு!

"ஆ....!" அலறினாள் கலோசனா.

பத்மாவும், சாமியாரும், வக்கீலும் அனந்தசயனமும் உள்ளே நுழைந்தார்கள்.

கலோசனா மயங்கி விழுந்தாள்.

"என்ன அண்ணா, என்ன ஆச்சு ?" என்றாள் பத்மா !

"ஒன்றுமில்லை. மனப்பாரம் விலகிவிட்டது. உண்மையின் அதிர்ச்சி தாளவில்லை, உன் நங்கைக்கு !" என்றார் சிவசாம்பு.

# க்ளாக்ஸோ மில்க் ஃபுட் குழந்தைகளை ஆரோக்கியமாக வளர்க்கிறது!




## உங்கள் செல்வமும் ஒரு க்ளாக்ஸோ குழந்தை தானே?

குழந்தையின் ஆரம்ப வாழ்வை ஆரோக்கியமாகத் துவக்குகிறது க்ளாக்ஸோ மில்க் ஃபுட்; காரணம், குழந்தைக்கு ஊட்டமளிப்பதற்கான எல்லாச் சத்துக்களையும் கொண்டது க்ளாக்ஸோ மில்க் ஃபுட்... அவனது எலும்புகளை உறுதியாக்கி, தசைகளையும் இரத்தத்தையும் வளர்க்கிறது அது. இந்தியாவில் முதன் முதலாகக் குழந்தைகளுக்கான பாலுணவைத் தயாரித்தவர்கள் அளிப்பது—க்ளாக்ஸோ மில்க் ஃபுட்

*Creative Unit-150 Tam*

(சென்னை சேப்பாக்கம் கிரிக்கெட் மைதானம். பாரதப் பிரதமர் இந்திரா காந்தி கோஷ்டிக்கும் மன்ஸுர் அலிகான் -- பிரபல திரைப்பட நட்சத்திரம் ஷர்மிளா டாகூரின் கணவர்; பட்டோடி நவாப் என்ற பட்டத்திலிருந்து சமீபத்தில் விடுதலையானவர் -- கோஷ்டிக்கும் இடையே கிரிக்கெட் பந்தயம் தொடங்கும் நேரம். பூவா? தலையா? பார்க்க காசு வீசப்படுகிறது.)

**இந்திரா காந்தி:** *தலை!*

**மன்ஸுர் அலிகான்:** *அதுதான் எங்க தலைவி லிருந்த தலைப்பா, கிரீடம் எல்லாவற்றையும்*



# காப்டன் இந்திரா!

-மேஜ-

*கழற்றி விட்டீங்களே! இன்னும் தலை ஆசை போகலியா? ஆஹா! விழுந்திருப்பது பூ!*

**இந்திரா காந்தி:** *(திடுக்கிட்டு): பூவா! அந்தப் பூவை நான் தலையாகவே கருதுகிறேன். உங்களுக்கு ஆட்சேபணை இருந்தால் மத்தியஸ்தரைக் கொண்டே நான் சொல்வதுதான் சரி என்று ஆமோதிக்கச் செய்கிறேன்.*

**மன்ஸுர் அலிகான்:** *அவர் மத்தியஸ்தரா? அடிக்கடி அவரை உங்கள் உதவிக்குக் கூப்பிட்டு நீங்கள் சொல்வதற்கெல்லாம் தலையாட்டச் சொன்னால் அவர் மத்தியஸ்தரல்ல; பிரதமஸ்தர்! சரி, இப்போ நீங்க மட்டை பிடிக்கப் போறீங்களா? இல்லே, பந்து வீசப் போறீங்களா?*

**இந்திரா காந்தி** *(மைதானத்தைச் சுற்றிப் பார்த்து): எங்கள் கட்சி மட்டை பிடிக்கப் போகிறது. ஜகஜீவன்ராமும் சவானும் ஆட்டத்தை ஆரம்பிக்கப் போகிறார்கள்.*

(இந்திரா காந்தி பெவிலியனை நோக்கி வருகிறார். மட்டையைக் கையில் பிடித்த ஜகஜீவனும் சவானும் தங்கள் கட்சிக் காப்டனைத் தாண்டி மைதானம் நோக்கி வருகிறார்கள். ஜகஜீவன் ஒரு கணம் தயங்கி நிற்கிறார்.)

**ஜகஜீவன்** *(தணிந்த குரலில்): என்னங்க! என்னைப் போய் முதலில்...*

**இந்திரா காந்தி:** *வேறே யாரை அனுப்புவது? டிஃபன்ஸ் மந்திரியா லட்சணமாய்ப் போய் நின்னு தொடை நடுங்காமே அடிச்சு விளாசணும். இல்லே! அடுத்த மாட்சிலே...*

**ஜகஜீவன்:** *சேர்த்துக்க மாட்டீங்களா? ஐயையோ! கைவிட்டுடாதீங்க, இதோ போகிறேன்! உங்களையும் மத்தியஸ்தரையும் நம்பித் தான் போகிறேன்.*

(ஆட்டம் ஆரம்பமாகிறது. மன்ஸுர் அலிகான் கட்சியைச் சேர்ந்த வெங்கடராகவன் பந்தை வீசுகிறார். மட்டை பிடித்திருக்கும் ஜகஜீவன் காலில் பந்து படுகிறது.)

**வெங்கட்ராகவன்:** *ஹவ் இஸ் தட்?*

**மத்தியஸ்தர்:** *என்ன கத்துகிறீர்? ஒன்றும் ஆகவில்லை. அந்தப் பந்தை பாட்ஸ்மன் அடித்திருந்தால் நிச்சயம் ஒரு சிக்ஸர் ஆகியிருக்கும். ஆகவே அவர் கணக்கிற்கு ஆறு ரன்கள்!*

(அதற்கான சமிக்ஞையைக் கொடுக்கிறார். அடுத்த பந்தை ஜகஜீவன் அடிக்க முயன்ற போது வாடேகர் அதைப் பிடித்துவிடுகிறார். 'ஹோ' என்ற ஆரவாரம்.)

**மத்தியஸ்தர்:** *என்ன கூச்சல்! அது நோ பால்!*

**மன்ஸுர் அலிகான்:** *அதை அப்பவே சொல்வதற்கு என்ன?*

**இந்திரா காந்தி:** *இப்போ நான் சொல்றேன். என்ன எதிர்ப்புக் கிளம்பினாலும் பயப் படமாட்டேன். அந்தப் பந்து பிடிபடலேன்னு இப்போ பவுண்டரியைத் தாண்டியிருக்கும். ஆகவே இந்த ஒரு பந்து வீச்சுக்கு மொத்தம் ஐந்து ரன்கள்...*

**மத்தியஸ்தர்:** *இதோ கொடுத்துட்டேன்!*

(ஐந்து ரன்களுக்கான சமிக்ஞையைக் காட்டுகிறார்! ஆட்டம் தொடர்கிறது. சவானுக்கும் பிரசன்னா பந்து வீசுகிறார். விக்கெட்டைச் சாய்த்து விட்டுப் பந்து, பின்னால் ஓடுகிறது. ஒரே ஆரவாரம்.)

**மத்தியஸ்தர்:** *நாட் அவுட்! விக்கெட் காற்றில் விழுந்திருக்கிறது. இந்த வீச்சில் 'பை' நாலு ரன்கள்! (சமிக்ஞை செய்கிறார்.)*

(பிரசன்னா அடுத்த பந்தை வீசுகிறார். சவான் அடிக்க முயல மட்டையில் பட்ட பந்தைப்



பின்னாலிருந்து விக்கெட்கீப்பர் இஞ்சினீர் பிடித்து விடுகிறார்)

**இன்சினீயர்:** *ஹவ்?*

**மத்தியஸ்தர்:** *நத்திங்! ஒரு விக்கட்கீப்பர் அவ்வளவு தூரம் உயரே தாவிப் பந்தைப் பிடிக்க கிரிக்கெட் விதிகளில் இடமில்லே. ஆகவே இந்த அடிக்கு ஆறு ரன்கள்.*

(சமிக்ஞை கொடுக்கிறார். தொடர்ந்து ஆட்டம் நடக்கிறது. கொஞ்ச நேரம் கழித்துத் தங்கள் கட்சி ஆட்டத்தை முடித்துக் கொள்ளவேண்டிய அவசியம் இல்லாவிட்டாலும் ஜனநாயக உணர்ச்சியால் உந்தப்பட்டு எதிர்க்கட்சியையும் ஆடவிடுவதாக இந்திரா காந்தி அறிவிக்கிறார். மன்ஸுர் அலிகான் கோஷ்டியைச் சேர்ந்த வாடேகரும் மன்காடும் மட்டை பிடித்து வந்து நிற்கிறார்கள். தீபக்குடன் அலி பந்தை வீசுகிறார். முதல் பந்து மத்தியஸ்தர் முழங்காலைப் பதம் பார்க்கிறது.)

கை நழுவி, அவர் முன் மூன்றடி தூரத்திலிருக்கும் இந்தப் பக்க விக்கட்டை உடைக்கிறது.)

**இந்திரா காந்தி:** *ஹவ் இஸ் தட்?*

**சத்தியநாராயண:** *இந்த ஆள் அவுட்.*

**மத்தியஸ்தர்:** *ஷ்ரி இஸ் கரெக்ட். இங்கே*



**மத்தியஸ்தர்** *(காலைத் தடவிக்கொண்டு):* *அவுட் (சமிக்ஞை செய்கிறார்.)*

**வாடேகர்:** *அதெப்படி? பந்து என்கிட்டே கூட வரலியே?*

**இந்திரா காந்தி:** *உங்க காலில் விழ வேண்டிய பந்து அது. தவறி மத்தியஸ்தர் காலில் விழுந்திருக்கிறது. அதனாலேதான் உங்களுக்கு எல். பி. டபிள்யூ. நீங்க அவுட்தான். மத்தியஸ்தர் கை உயரே போய் விட்டது.*

(ஆட்டம் தொடர்கிறது. வாடேகரைத் தொடர்ந்து மன்காட் அமர்நாத் இருவரும் அவுட் ஆகிறார்கள். கவரண்ணின் கோட்டைத் தாண்டி வந்து விசுவநாத்துக்குப் பந்து வீசுகிறார்.)

**விசுவநாத்:** *அது 'நோ'பால்தானே?*

**இந்திரா காந்தி:** *அது 'எஸ்' பால்! என்னிடம் யாரும் 'நோ' சொல்ல முடியாது. சொல்லக் கூடாது!*

**மத்தியஸ்தர்:** *எஸ்! எஸ்! விசுவநாத் அவுட். அந்தப் பந்தை அடித்திருந்தாலோ அல்லது அடிக்க முயன்றிருந்தாலோ அவர் அவுட் ஆகியிருப்பார். ஆகவே, அவர் இப்போ அவுட்.*

(சமிக்ஞை காண்பிக்கிறார். ஆட்டம் தொடர்கிறது. சத்தியநாராயண பின்னால் மன்சூர் அலிகானுக்குப் பந்து வீசுகிறார். பந்து

நிற்கும் அம்பர் ராய் இப்போது 'ஸ்டம்ப்ட்'. அதனாலே அவுட்.*

**அம்பர் ராய்:** *சார்! நான் விக்கெட்டுக்குப் பின்னாலே நிற்கிறேன். முன்னாலே இல்லே!*

**இந்திரா காந்தி:** *மத்தியஸ்தர் தீர்ப்புக்குக் கட்டுப்பட்டாக வேண்டும். நாங்க கட்டுப்படலே? அம்பயர்! நீங்க என்ன சொல்றீங்க?*

**மத்தியஸ்தர்:** *நீங்க சொல்றது செண்ட் பொர்சண்ட் கரெக்ட்! இந்த ஆள் அடுத்த இன்னிங்ஸிலும் இப்படியே அவுட்.*

(அம்பர்ராய் வெளியேற ஆட்டம் தொடர்ந்து வெகுசீக்கிரம் முடிவடைகிறது. இந்திரா காந்தி கோஷ்டியினர் வெற்றிப் பெருமிதத்துடன் பெவிலியனை நோக்கி நடக்கிறார்கள்.)

"இந்திரா காந்தி கிரிக்கெட் காப்டனாய் இருந்தால் எத்தனை தீர்ப்பையும் தம் இஷ்டப்படி மாற்றி எல்லா டெஸ்ட் மாட்சுகளையும் எளிதில் ஜெயித்துவிடுவார்" என்று சொன்னார் மன்ஸுர் அலிகான். 'பட்டோடி நவாப்' என்ற பட்டத்தை அவர் இழந்தது பற்றிப் பத்திரிகை நிருபர் கேட்டபோது அவர் கூறிய பதில் இது.




★ இக் குறியிட்ட கடிதம் ரூ. 15/- பரிசு பெறுகிறது.

**வை**த்தியன் நோயாளியைப் பரிசோதித்து டாக்டர்களைப் போல் மருந்தை எழுதிக் கொடுத்தால் போதாது. அந்த மருந்துகளை அவனே தயாரித்து அளிக்க வேண்டும். இப்படி மருந்துகளைத் தயாரிக்க ஒரு ஃபார்மஸி, ஆள் அம்புகள் முதலிய உபகரணங்களை வைத்துப் படைக்க வேண்டும்.

இந்நிலையில் மருந்துகளுக்குத் தேவையான மூலப் பொருள்களாகிய சுக்கு, மிளகு, திப்பிலி முதலியன யானை விலை, குதிரை விலையாக ஏறி யிருக்கின்றன. ஒரு பலம் சுக்கு 60 பைசா. ஒரு பலம் ஏலரிசி ரூ. 1–75. ஒரு குண்டு விறகு ரூ. 4–50 என்றிப்படி விலைகள் வானை முட்டி விட்டன. இதில் இலவங்கம் (கிராம்பு) மஞ்ஜட்டி, பறங்கிச் சக்கை போன்றவை கிடைப்பதே குதிரைக் கொம்பாகி விட்டன. காரணம், இவை வெளிநாட்டுக்கு ஏற்றுமதிப் பொருளாகி விட்டன. நாட்டின் தேவையை அநுசரித்து ஏற்றுமதி செய்யப்படுமானால், இந்த விலையேற்றம் இராது. எனவே, நாட்டு மருந்துகளை வாங்கிச் செல்லும் நோயாளிகள், நாட்டு மருந்துகளுக்குமா இப்படி விலை ஏற்றம் என்று எண்ணுகிறார்கள். அவர்கள் வருவாய் அதற்கேற்ப உயராததே காரணம்.

டாக்டர் மருந்தானாலும் அதற்கான செலவு, டாக்டர் ஃபீஸ் ஆகியவை ஆபீஸில் ஈடுசெய்யப்படுவது போல், மத்திய அரசினர் நாட்டு மருந்து விஷயத்திலும் தங்கள் காரியாலய ஊழியர்களுக்குத் தர நடவடிக்கை எடுத்துள்ளனர். இது போன்று சலுகை வழங்கும் முறையைத் தனியார் துறை நிறுவனங்களும் பொதுத் துறை நிறுவனங்களும் மேற்கொண்டால் நம் நாட்டு வைத்தியமுறை வளர்ச்சியுற வழியுண்டு.

சென்னை–34
11–9–70 ஸ்ரீஹரி

**மு**தல்வர் திரு மு. கருணாநிதி அவர்கள், ராஜமானிய ஒழிப்புக்குத் தமது கட்சி சாதகமாக வோட்டளித்ததற்குக் காரணம் தெரிவிக்கையில் அரசியல் சாஸனத்தில் இருந்த மானிய ஏற்பாடு, காலத்துக்கு ஒவ்வாதது, எப்பொழுதோ பத்தொன்பது ஆண்டுகளுக்கு முன் செய்து கொண்ட உடன்படிக்கை இப்போதைய நாட்டு நிலவரத்துக்குப் பொருந்தாது, சமதர்ம ஆட்சிக்கு வழிசெய்யாது என்றெல்லாம் கூறியிருக்கிறார்.

ஆனால் இதே முதல்வர், காவேரி நதி பங்கீடு தாவாவில் 1924ம் ஆண்டு செய்து கொண்ட உடன்படிக்கையின்படிதான் பேச்சு வார்த்தை நடத்தப்பட வேண்டும் என்று கூறுகிறார்.

நெய்வேலி–3
12–9–70 டி. ஆர். ஆர். மணி

**க**ல்கி 13-9-70 இதழில் கேரளப் பல்கலைக் கழகத் தமிழ்த் துறையில் 'அலை ஓசை' பற்றி ஒரு மாணவர் ஆய்வு செய்வதாக எழுதப்பட்டிருந்தது. அது சரியல்ல. தற்கால இலக்கியங்களில் பாட நூலாக அலை ஓசை அமைந்துள்ளது. நாங்கள் பன்னிரண்டு மாணவ மாணவியர் இந்த ஆண்டு ஆய்வுகளை முடிக்கின்றோம். தமிழ் இலக்கியத்தில் ஆடை வகைகள், பள்ளு இலக்கியங்கள், கவிமணியின் குழந்தைப் பாடல்கள், பரிபாடலில் இயற்கை, திருக்குறளும் மணிமேகலையும், கலாவதி நாடகம், பெரிய புராணத்தில் பெண்டிர்கள், நற்றிணையில் தோழி, தாலாட்டுப் பாடல்கள், திருப்பாவையும் திருவெம்பாவையும், திருக்கோவையாரின் நயம் ஆகிய தலைப்புக்களில் ஆய்வு செய்கின்றோம். ஒரு மாணவி தற்காலச் சிறுகதை ஒன்றின் மொழி நிலையை ஆய்வு செய்கின்றாள். எங்களது ஆய்வுக் கட்டுரை (தீஸிஸ்) புத்தகமாக வெளியிடப்படுவது எங்கள் துறையின் சிறப்பான பணியாகும்.

கேரளப் பல்கலைக் கழகம்,
12–9–70 ந. சிவராக,
தமிழ்த் துறை முதுகலை மாணவன்

★ **ந**ம் நாட்டில் அரசாங்க நிறுவனங்கள் எவ்வளவு திறம்பட நடத்தப்படுகின்றன என்பதை எடுத்துக்காட்ட இதோ சில உதாரணங்கள்:

இவ்வருடம் பி. டெக்கில் முதல் வகுப்பில் தேறின என் மகன் மேற் படிப்புக்காகப் பல இடங்களுக்கும் மனுச் செய்தான். அதில் கீழ்க் குறிப்பிட்டுள்ள இரண்டு அரசாங்க ஸ்தாபனங்களிலிருந்து அவனை நேரில் பேட்டி காண வரும்படி அழைப்புகள் வந்தன. அக் கடிதங்களின் விவரங்கள் வருமாறு:

1. ஸ்தாபனத்தின் பெயர்: பாபா அணு ஆராய்ச்சி நிலையம், டிராம்பே. கடிதத்தின் தேதி: 25–7–70; கடிதம் கிடைத்த தேதி: 29–7–70; பேட்டிக்கான தேதி: 30–7–70! (9 மணி.)

2. அப்ரெண்டிஸ் பயிற்சி வாரியம், சென்னை. கடிதத்தின் தேதி: 19–8–70; கடிதம் கிடைத்த தேதி: 25–8–70; பேட்டிக்கான தேதி: 22–8–70! (10 மணி.)

இதே போல் ஹிந்துஸ்தான் ஸ்டீல், ராஞ்சியிலிருந்து 8–8–70 தேதியிட்ட கடிதத்துடன் ஒரு விண்ணப்பத் தாளையும் அனுப்பி அதை 22–8–70க்குள் பூர்த்தி செய்து அனுப்பும்படி எழுதியிருந்தார்கள். ஆனால் அந்தக் கடிதம் கிடைத்த தேதியோ 24–8–70!

இப்படி வேணுமென்றே காலம் கடத்திக் கடிதங்கள் அனுப்பியும், ஆசை காட்டி மோசம் செய்தும், இளைஞர்களின் மனத்தைப் புண்படுத்துவதுதான் நம் அரசாங்கத்தின் நோக்கம் போலும்!

ஆறுமுகநேரி,
14–9–70 லக்ஷ்மி சிவராமகிருஷ்ணன்.

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

